

பூருவாசாரியர்கள் போதமநுட்டானங்கள்
கூறுவார் வார்த்தைகளைக் கொண்டுநீர்-தேறி
இருள்தருமாஞாலத்தே இன்பமுற்று வாழும்
தெருள் தருமா தேசிகனைச் சேர்ந்து.

பூர்வாசார்யர்களுடைய ஞானமும் அநுட்டானமும் இப்படி இருக்குமென்று கூறும் பாகவதர்களுடைய வார்த்தைகளைக் கொண்டு, (ஆசார்ய லக்ஷணத்தைத்) தெளிந்து (அப்படிப்பட்ட லக்ஷணங்களையுடையராகையாலே) உங்களுக்குத் தெளிவையூட்டுகிற அப்படிப்பட்ட மஹாசார்யர்களையணுகித் தெளிந்து அவர்களுக்குத் தொண்டு செய்துகொண்டு, பரமபதம் போகிற வரையில் இவ்வுலகிலேயே இன்பமுடன் வாழுங்கள் என்கிறார் மணவாளமாமுனிகள்.

(உபதேசரத்தினமாலை - 72)

# ஸப்தகிரி


நவம்பர் - 1996

மலர் 27 இதழ் 6

தனிப்பிரதி ரூ. 4/- வருடச்சந்தா 48/-



சிறப்பாசிரியர் :

திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.

செயலாட்சித்தலைவர்,

தி.தி.தேவஸ்தானம்,

திருப்பதி.

ஆசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. எம். லக்ஷ்மண் ராவ்,

மேலாளர்,

தி.தி.தேவஸ்தான அச்சகம்,

திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,

"Sapthagiri"

T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீ புஷ்பயாகம் - திருமலை.

பின்னட்டை : ஸ்ரீ ஜகன்மோகினி திருக்கோயில் - ரேலி-ஆ.பி.

முதல் உள்ளட்டை: தீபாவளித் திருநாள் - சித்திரம்: மாஸ்ரீ

2வது உள்ளட்டை: ஸ்ரீ மணவாள மாமுனிகள்-சித்திரம்: கே. ஜெகதீஷ்

JAGADISH

# உங்களுடன்...

கடவுள் மனிதனிடம் என்ன எதிர்பார்க்கின்றான்? அம்மனிதன் கடவுளிடம் என்ன எதிர்பார்க்கின்றான்? மனிதனாகப் பிறந்தவன் மீண்டும் மனிதனாகவே தன்னை விரைவில் அடைய வேண்டும் என்று இறைவன் நினைக்கின்றான். தான் நினைத்ததெல்லாம் தன் வாழ் நாளில் பெறவேண்டும் என்று மனிதன் ஆசைப்படுகின்றான். இருவர் விருப்பங்களும் நிறைவேறுகின்றனவா? இல்லை என்றுதான் கூறவேண்டும். இது இருவருக்கும் ஏற்பட்ட ஏமாற்றங்களா? ஆமாம் என்று தான் கூறவேண்டும். மனிதனை விரைவில் தன்னுடன் இணைத்துக்கொள்ள வேண்டும் என்று இறைவன் விரும்புகின்றான் என்றால் அது மனிதனின் மரணத்தை எதிர்பார்த்து கருதியதல்ல. பிறவிகளிலேயே சிறந்ததாக விளங்குவது மானிடப்பிறவி. அந்தப் பிறவியிலிருந்து அவனை மேலும் உயர்நிலைக்கு அழைத்துச்சென்றிட, இறைவன் அவன் நிலைக்கு இற(ர)ங்கிவந்து, பல்வேறு யுகங்களில் பல்வேறு அவதாரங்களை மேற்கொண்டு தான் தாழ்ந்து மனிதனை உயர்த்திட ஒவ்வொரு கணமும் அவாவுறுகின்றான். ஆனால் மனிதன் தன் உலகாயுத பற்றுக்களின் காரணமாக இறைவனின் முயற்சிகளை கணமும் தடுத்துக்கொண்டே இருக்கின்றான்.

காற்றினை எதிர்த்துக் கரையைத் தொட்டுவிட இறைவன், மனிதன் எனும் ஓடத்தினைச் செலுத்திட, கடும் முயற்சி மேற்கொள்ள, ஆசைகள் எனும் பாய்மரத்தினை காற்றுக்கு ஏதுவாக மனிதன் விரித்திடுகின்றான். ஆகவே மனிதனின் ஆசைகள் இறைவனின் ஆசைக்கு முட்டுக்கட்டைகளாக விளங்குகின்றன. எனவேதான் இருவரின் விருப்பங்களும் நிறைவேறவில்லை. ஆகவே மனிதன் நினைத்தால்தான் இறைவனின் விருப்பம் நிறைவேறும்போலும். இது சாத்தியமாகுமா? ஆகும். அதற்காகத்தான் இறைவன் தன்னை தாழவிட்டுக்கொண்டு மனிதனை உயர்த்திட பல அவதாரங்கள் இம்மண்ணில் புரிந்திட்டான்; பல தத்துவ உபதேசங்களை கூறிட்டான்; பல ஞானிகளை, அடியார்களைப் பிறப்பித்தான். அவர்கள் கூறியதென்ன?

ஒரு மனிதன் நேசிக்கத்தெரிந்து கொள்ளும்போதெல்லாம் அவன் உயர்ந்தவனாகத் திகழ வாய்ப்பு ஏற்படுகிறது. ஓர் உயிர் மற்றொரு உயிரினை நேசிக்கக் கற்றுக்கொள்ளும்போதுதான், அவ் உயிரின் உயர்வு தெரியவரும். இம்மண்ணின் உயிர்கள் யாவும் அவ் இறைவனின் படைப்பேயாகும். அவ்வுயிர்கள் மீது கருணை, அன்பு, காட்டும்போது தான் மனிதன் தன்னைப்பற்றி அறிந்துகொள்ள முற்படுகின்றான். மனிதன் தன்னை அறிந்தால்தான் அவனால் இறைவனை அறியமுடியும். அந்த உள்ள, உடல் பக்குவத்தினை மனிதன் பெற்றிடவே இறைவன் பல்வேறு நிலைகளில் பலவகையாக மனிதனுக்கு உபதேசித்துள்ளான். அதுதான் இயற்கைவழி இறைவழிபாடு. இது இறைவன் தன் விருப்பத்தினை நிறைவேற்றிக்கொள்ள மேற்கொண்ட பல உத்திகளுள் ஒன்றாகும். இறைவன் தன் அவதாரகால லீலைகளின் போது இயற்கையினை பலவாக தன்னோடு இணைத்துக்கொண்டு அவற்றிக்குப் புனிதமேற்படுத்தினான். மலைகளில் இமயமாகவும், மரங்களில் அரசமரமாகவும், நீர்நிலைகளில் கடலாகவும், பறவைகளில் கருடனாகவும், விலங்குகளில் சிங்கமாகவும் தான் இருப்பதாகக் கூறி மற்றைய உயிரினங்களுக்கும் உயரிடம் அளித்தான்.

(திரும்புக)

**"பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி । ததஹம் பக்த்யுபஹ்ருதமச்னாமி ப்ரயதாத்மன: ॥"** என்று கீதையில் பகவான் புல், பூண்டும் கூட பக்தியால் உயர்வு பெறுகின்றன என்பதைத் தெளிவாகத் தெரிவித்தான். மற்றைய தெய்வங்களைவிட, மெய்ப்பொருளாம் அம்மாலவன் தன்னை ஆடை ஆபர ணங்கள், வண்ண மலர்களால் அலங்கரித்துக்கொண்டு 'அலங்காரப்ரியன்' என்று அழைப்பதில் பெருமிதம் கொண்டான். ஒருசில துளசி இலைகளுக்கு தன்னை சமமாக்கிக்கொண்டு, பக்தியின் வல்லமைக்குப் புதுப் பொருள் தந்தவன் அக்கண்ணபெருமான். திருமகளை மலர்மங்கையாக்கி மார்பில் கொண்டவன் அம்மாதவன்.

எதிர்காலத்தில் இம்மண் ஒருநாகரீகமான வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமென்றால் இயற்கை போற்றிப்பாதுக்காக்கப்பட வேண்டும். இந்த உண்மையை இன்றைய விஞ்ஞானமும் நமக்கு எச்சரித்து தெரிவித்துள்ளது. இதனை அறிந்துதான் என்னவோ இயற்கைச்சூழலில் நின்று நாளும் நம் அல்லல்களைத் துடைத்திட அக்கோவிந்தன் நல்லருள் புரிந்துவருகின்றான் போலும். நாளும் பட்டுப்பீதாம்பரமும், உயர் அணிகலன்களும் அணிந்து அருள்புரிந்திடும் அவ்வேதநாயகன் வாரத்தில் ஒருநாள் 'பூலங்கி'யில் சேவை சாதித்தும், ஆண்டாண்டு பிரம்மோத்ஸவத்திற்குப் பிறகும், ஆனிவார ஆஸ் தானத்தன்றும் புஷ்பயாகம் என்றும், புஷ்ப பல்லக்கு என்றும் முறையே விழா கொண்டாடி மலர்கள் வழி இயற்கையின் பெருமையினை கூறாமல் கூறி வருகின்றான்.

**'பூவாடை பொலிந்து நின்ற பிரான்'** என்று சிலம்பு கூறியதற்கேற்ப ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கு ஏற்ப வண்ணமலர் வகைகளை அணிந்து அருள் பாலித்திடும் அப்பாவை மணாளனுக்கு மலர்த்தொண்டினைத் தன் வாழ்நாளின் பெருந்தொண்டாக - புனித வேள்வியாக திருமலைநம்பிகளும், அனந்தாழ்வாரும் ஏற்றுக்கொண்டதன் மூலம் அவர்கள்தம் வேங்கடவன் பக்தி ஈடுபாட்டினையும், வேங்கடவனின் மலர் ஈடுபாட்டினையும் தெளிந்து இன்புறலாம். கி.பி. 13-ஆம் நூற்றாண்டு துவக்கத்திலேயே திருமலையில் ஆஸ்ரம துறவிகளாலும், திருப்பதி சுற்றி உள்ள பகுதிகளை ஆண்டுவந்து குறுநில மன்னர்களாலும், உள்ளூர் வணிகப்பெருமக்களாலும் மலர்த்தோட் டங்கள் பல நிறுவப்பட்டும், திருமலைக்கோயிலுக்கு வண்ண மலர்கள் அனுப்பப்பட்டும் இம்மலர்த்திருப்பணி தொடரப்பட்டு இன்றுவரை தேவஸ் தான மேலாண்மையால் நடைபெற்று வருகின்றது. இவ்வகையில் நடந்து முடிந்த பிரம்மோத்ஸவத்தைத் தொடர்ந்து இவ்வாண்டு நடைபெறும் "புஷ்ப யாகம்" மனிதனின் விஞ்ஞான வளர்ச்சிக்கும், இயற்கை ஈடுபாட்டிற்கும், எல் லாவற்றிற்கும் மேலாக பக்திப்பெருக்கிற்கும் ஓர் அடையாளமாக விளங்கிடும் என்பதில் ஐயமில்லை. இயற்கையினைக் கண்டு களித்திடும்போதெல்லாம் அம் மலர்மங்கை நாயகனின் திருவருள் நம் நெஞ்சில் நாளும் நிழலாடும். வீட்டுக்கு ஒருமரம் வைக்கமுடியாவிட்டாலும் - வசதி இல்லாவிட்டாலும் - ஒரு துளசிச் செடியையாவது வளர்த்து, மணமிக்க மலர்த்தோட்டங்கள் இல்லாவிட்டாலும் ஒரு மலர்ச்செடியையாவது வளர்த்து - தூயமனது டன் அவற்றை அம்மாதவனுக்கே அர்ப்பணித்து, புஷ்பயாகம் தந்திடும் செய்தியினை உணர்ந்து, இயற்கைவழி அக்கலியுக பரமனை நாளும் அடிபணிவோமாக!

# செய்திச் சுருக்கம்

## நவராத்திரி பிரம்மோத்ஸவம்

திருமலையில் ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் நவராத்திரி பிரம்மோத்ஸவம் 13-10-96 முதல் 21-10-96 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. அதிக மாதம் காரணமாக இவ்வாண்டில் இரண்டாம் முறையாகக் கொண்டாடப்பட்ட இப்பிரம்மோத்ஸவம் துவஜாரோஹணம் நிகழ்ச்சியின்றி துவக்கப்பட்டது. 17-10-96 அன்று நடைபெற்ற கருட சேவையினை சுமார் ஒரு இலட்சம் பக்தர்கள் கண்டுகளித்தனர். இந்நிகழ்ச்சியில் ஆந்திர அரசு சார்பில் ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. சிம்மாத்ரி சத்யநாராயணு அவர்கள் கலந்து கொண்டனர். 20-10-96 அன்று நடைபெற்ற தங்கத்தேர் உத்ஸவம் கண்ணுக்கும் கருத்துக்கும் பெருவிருந்தாக அமைந்தது. இப்பத்துநாள் உத்ஸவத்தின்போது காலையிலும், மாலையிலும் தி.தி. தேவஸ்தான தர்ம பிரசார பரிஷத் சார்பில் இசை மற்றும் பக்தி நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இதுபோது திருமலை சேஷாத்ரிநகர் அருகில் பலவகையான மலர்கள், கனிகள் இடம் பெற்ற 'கண்காட்சி' ஒன்று தி.தி. தேவஸ்தான தோட்டத்துறை சார்பில் நடைபெற்றது. 21-10-96 அன்று நடைபெற்ற சக்ரஸ்நாந நிகழ்ச்சிக்குப் பிறகு அடுத்த நாளன்று 'பாரி வேட்டை' உத்ஸவம வெகுச் சிறப்பாக நடைபெற்றது.

* * * *

## திருமலையில் குடியரசுத் தலைவர்

இந்தியக் குடியரசுத்தலைவர் டாக்டர் சங்கர்தயாள் சர்மா அவர்கள் மூன்றுநாள் பயணமாக திருமலைக்கு 24-10-96 அன்று வருகை புரிந்தார். அன்று மதியம் திருப்பதிக்கு வருகை புரிந்த குடியரசுத்தலைவரை ஆந்திரமாநில அரசு அறநிலையத்துறை அமைச்சர் திரு. எஸ். சத்யநாராயணு, தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக், இணைச் செயலாட்சித் தலைவர் மற்றும், தேவஸ்தான உயர் அலுவலர்களால் வரவேற்கப்பட்டார். திருமலையில் தன் தலைப்பு காணிக்கையினைச் சமர்ப்பித்தபின்னர் பூலங்கி சேவை, சுப்ரபாதம், தோமாலை, அர்ச்சனை, அபிஷேகம், ஸஹஸ்ர தீபாலங்காரம் போன்ற பல்வேறு கோயில் சேவைகளில் பங்கேற்றார். 26-10-96 அன்று காலை திருமலையில் தி.தி. தேவஸ்தான ஒலிப்பதிவுத் துறையினால் பதிவு செய்யப்பட்ட 'வேதாம்ருதம்' எனும் ஒலிப்பேழையின் 3-ஆவது தொகுதியினை வெளியிட்டார்.

* * * *

## திருமலையில்

இந்தியப் பிரதமர் திரு. தேவகௌடா அவர்கள் 20-10-96 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். திருமலையில் பிரதமர் அவர்கள் தேவஸ்தான செயலாட்சித்தலைவர் அரசு வருவாய்த்துறை முதன்மை அலுவலர் திரு. ராம்பாபு மற்றும் தேவஸ்தான உயர் அலுவலர்களால் வரவேற்கப்பட்டார. தரிசனத்திற்குப் பிறகு திருமலைக் கோயில் ரங்கநாயகலு மண்டபத்தில் கோயில் பிரஸாதங்கள் வழங்கப்பட்டன.

* * * *

## முதலாழ்வார்கள் வைபவம்

தி.தி. தேவஸ்தானத்தாரின் ஆழ்வார் திவ்ய பிரபந்த திட்டத்துறையின் சார்பில் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய முதலாழ்வார்களின் 'திருநட்சத்திர' ஜெயந்திவிழா வெகுச் சிறப்பாக திருப்பதி ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் 21-10-96 முதல் 24-10-96 வரை நான்கு நாட்களுக்கு நடைபெற்றன. 23-10-96 அன்று பிள்ளை லோகாசார்யாவின் ஜெயந்திவிழா இனிதே கொண்டாடப்பட்டது. இந்நிகழ்ச்சிகளின்போது திருவாளர்கள் டாக்டர். மேடசானி மோகன், சி.ஆர். ரங்கராஜன், எம். கொண்டமாசார்யலு, எஸ்.பி.எஸ். பட்டாசார்யா, என். எஸ். ராமமூர்த்தி ஆகியோர் பல்வேறு நிலைகளில் சிறப்புரை ஆற்றினர். இதுபோது இரவு நேரங்களில் இசை மற்றும் நாட்டிய நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

# இந்து மதம்

திரு. பொன். சுப்பிரமணியன் - மயிலாடுதுறை.

## முன்னுரை :

உலகில் பரவி வரும் பல்வேறு மதங்களில் மிகவும் பழமையும் பெருமையும் வாய்ந்து திகழ்வது நமது இந்து மதம். பிற சில மதங்களைப் போல, நமது இந்து மதமானது ஒரு குறிப்பிட்ட காலத்தில், ஒரு குறிப்பிட் ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டதன்று. மற்றையச் சமயங்கள் இன்ன காலத்தில் இன்னாரால் தோற்றுவிக்கப்பட்டன என்றெல்லாம் வரலாற்று நூல்கள் கூறக் காண்கிறோம். அவ்வாறு கூறுதற்கு இயலாத நிலையில் வரலாற்று காலத்திற்கும் மிக முற்பட்டு மிக்க பழமை வாய்ந்ததாக நமது இந்து மதம் விளங்கி வருகின்றது. எத்தனையோ பல மதங்கள் உலகில் ஆங்காங்கே தோன்றிப் பின்னர்க் காலப்போக்கில் மறைந்து போயிற்று. அவ்வாறின்றி நமது இந்து மதம் தொன்று தொட்டு இன்றுகாறும் நின்று நிலவி வழங்கி வருகின்றது. அது பற்றியே இந்து மதத்தினைச் 'சநாதன தருமம்' என்று நம் சான்றோர்கள் போற்றி வந்துள்ளனர்.

## தொன்மை :

'இந்து மதம்' என்னும் சொல், நமது பழைய வேதம் உபநிடதம் ஆகமம் புராணம் முதலிய நூல்கள் எதிலும் காணப்படவில்லை. என்றும் அஃது அண்மையிற் சில காலமாகவே வழங்கி வருகின்ற வேற்று புலச் சொல் என்றும் ஒரு சிலர் கூறுவதுண்டு. அது ஒருவகையில் உண்மையே ஆகுமாயினும், அதுபற்றி ஏதுங் குறையில்லை.

"தொன்மையவாம் எனும் எவையும்
நன்றாகா; இன்று
தோன்றியன எனும் எவையும்
தீதாகா.............."

என சைவ சித்தாந்த சந்தான ஆசிரியர்களுள் ஒருவராகிய உமாபதி சிவம் கூறுவது, ஈண்டு நாம் எண்ணி உணர்தற்குரியது.

"கடிசொல் இல்லைக்
காலத்துப் படினே"

என ஆசிரியர் தொல்காப்பியர் அருளிச் செய்திருக்கிறார். இங்கு நாம் இதனை சிந்திக்கத்தகுவனவாகும். சொல் புதியதாயினும் அதன் பொருள் மிக்க தொன்மை வாய்ந்தது எனலாம்.

## பொதுமை :

நமது இந்தியப் பெருநாட்டில் பலதிற மக்களும், பல்வேறு மொழிகளும், பல்வேறு மொழி பழக்க வழக்கங்களும் பண்பாடுகளும் ஆங்காங்கே அமைந்து விளங்கக்காண்கிறோம். ஆயினும் இப்பலதிற வேறுபாடுகளுக்கும் இடையே ஒரு பெரும் பொதுத் தன்மையும் ஊடுருவி நின்று பொலிந்து திகழ்தல் காணப்படுகின்றது. இந்திய மக்களின் புறக்கோலங்களும் பிறவும் வேறுபட்டாலும் அவர்கள் அனைவருடைய உளப் போக்கும் உணர்வும் பெரும்பாலும் ஒரே தன்மை உடையன வாய விளங்குகின்றன. இமயம் முதல் குமரிவரையிலுள்ள எல்லா மக்களும் பற்பல துறைகளில் மிகவும் வியக்கத்தக்க நிலையில் ஒத்த மனப்பான்மையும் உணர்வும் உடையவராக இருக்கின்றனர். கடவுள் நம்பிக்கையிலும் விக்கிரக வழிபாடுகள்புரிவதிலும் பல்வேறு சடங்குகள் இயற்றுவதிலும் பாவம் புண்ணியம் ஊழ்வினை பிறப்பு இறப்பு மறு பிறப்பு சுவர்க்கம் நரகம் என்பன பற்றிய கொள்கையிலும் இந்திய மக்கள் அனைவருக்குமிடையே ஒத்த கருத்தே நிலவி வருகின்றன. இவைகள் யாவும் இந்திய மக்களின் அடிப்படைக் கருத்துக்களாக அமைந்திருக்கக் காண்கிறோம். சார்வாகம், சமணம், பௌத்தம், சைவம், வைணவம், சாக்தம், சீக்கியம் முதலிய சமயங்களும் கேவலாத்துவிதம், விசிட்டாத்துவைதம், துவைதம், சுத்தாத்துவிதம் முதலிய எத்துணையோ பல தத்துவக் கொள்கைகளும் நமது இந்தியப் பெருநாட்டில் விளங்கி வழங்கி வருகின்றன. ஆயினும் அவைகள் அனைத்தையும் தனக்குள் ஏற்று தழுவிக் கொண்டு விளங்கி வரும் சிறந்த பொதுமைப் பெருநெறியே இந்து மதம் ஆகும் என நாம் கூறலாரம்.

## பெருமை :

இந்து மதமானது ஒரு வகையில் "முன்னைப் பழம் பொருட்

டும் முன்னைப் பழம் பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியினதாய்"ப் பெருமையுற்றுப் பிறங்கி வருகின்றது. உலகின் பல பகுதிகளில் இந்து மதம் பண்டும் பரவியிருந்தது; இன்றும் பரவியிருந்து வருகின்றது. சமணமும் பௌத்தமும் சீக்கியமும் போன்ற மதங்கள் இந்து மதத்தினின்று தோன்றிய கிளை மதங்களாகும். எத்தனையோ கோடிக்கணக்கான மக்களுக்குரிய மதமாக இந்து மதம் இலங்குகின்றது. இந்து மதத்தை எதிர்த்துப் பல இயக்கங்களும் கொள்கைகளும் அவ்வப்போது தோன்றின. எனினும் அவற்றையெல்லாம் வென்று இன்றும் உயிர்ப்பாற்றலுடன் இந்து மதம் இலங்குகின்றது. உலகப் புகழ்பெற்றவர்களாகிய விவேகானந்தரும், அரவிந்தரும், இரவீந்திரநாத் தாகூரும், காந்தியடிகள் போன்ற பல பெருஞ்சான்றோர்கள் இந்து மதத்தினை பெரிதும் விரும்பிப் போற்றி மகிழ்ந்துள்ளனர்.

## சிறப்பு :

தமிழ்நாட்டில் தோன்றிய தத்துவ ஞானிகளில் தலைசிறந்த ஒருவரும், சிவஞான சித்தியார் என்னும் செந்தமிழ் தத்துவப் பெருநூலை இயற்றியருளியவரும் ஆகிய அருள்நந்தி சிவாச்சாரிய சுவாமிகள் அவர்கள், உலகத்திலுள்ள பல சமயங்களும் அவற்றிற்குரிய பல நூல்களும் தம்முள் ஒன்றோடொன்று ஒவ்வாமல் மிகவும் மாறுபட்டனவாக உள்ளன. இவற்றுள் சிறந்த சமயம் யாது? சிறந்த பொருள் நூல் யாது? என்று நாம் ஆராய்ந்தால் எந்தச் சமயத்தையும் நூலையும் இகழாமலும், 'இதுவே பொருந்தும்', அது பொருந்தாது' என்னும் பூசல்கள் இன்றியும், பல சமயங்களும் நூல்களும் கூறுகின்ற எல்லா உண்மைகளையும் ஏற்ற பெற்றி உடன்பட்டுத் தழுவிக் கொண்டு, அவைகள் அனைத்திற்கும் ஒருபெரும் நிலைக்களனாகத் திகழும் சமயமும் நூலுமே, உண்மையிலேயே சிறந்த ஒரு பெருஞ்சமயம் மற்றும் நூலுமே ஆகும் எனக் குறிப்பிடுகின்றார்.

ஓது சமயங்கள், பொருள் உணரும் நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாமல் உள பலவும் இவற்றுள்
யாது சமயம்? பொருள்நூல் யாது? இங்கு என்னில்
'இது ஆகும், அது அல்லது' எனும் பிணக்கது இன்றி
நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றது யாது ஒரு சமயம் அதுசமயம்; பொருள்நூல்

## மானியர் வில்லியம்ஸ் :

இவ்வுண்மையை நன்கினிது வலியுறுத்தி வற்புறுத்தும் முறையில் சர். மானியர் வில்லியம்ஸ் என்னும் மேலைநாட்டுப் பேரறிஞர், இந்து மதம் பற்றிக் கூறியிருக்கும் பின்வரும் கருத்துக்கள் இங்கு நாம் அறிந்து இன்புறுதற்குரியன.

"இந்து மதம் எல்லாச் சமயங்களிலும் உள்ள நல்ல கொள்கைகளை ஏற்றுக் கொள்ளுகின்றது. எந்த ஒரு சமயத்தையும் இகழ்ந்து புறக்கணிக்காமல், எல்லாவற்றையும் ஏற்றபெற்றி உடன்பட்டுத் தழுவிக் கொள்கின்றது. மனித குலத்திற்கும் மனித இயற்கைக்கும் அனைத்துலகிற்கும் உரிய இனிய மதமாக அது திகழ்கின்றது. வேறு எந்த மதத்தின் வளர்ச்சியினையும் தடுத்து எதிர்க்கும் இயல்பு அதன்கண் காணப்படவில்லை. ஏனைய எல்லாச் சமயங்களையும் தனது பரந்து விரிந்த பெரு நோக்கினால், தன்பால் ஏற்றுக்கொள்ளும் - இணைத்து தழுவிக்கொள்ளும் பெரு மாட்சிமை உடையதாக இந்து மதம் விளங்குகின்றது. மனித குலத்திற்கும் மனித மனப்போக்கிற்கும் ஊரிய எத்தகைய வேறுபாடுகளுக்கும் இணங்கி இசைந்து ஒத்துச் செல்லும் தன்மையில், இந்து மதம் இணையற்றதாகத் திகழ்கின்றது. இவ்வியல்பே அதன் வலிமைக்கும் வளர்ச்சிக்கும் காரணம் எனலாம். தத்

## அபிஷேகப் பலன்

இறைவனுக்கு நாம் செய்யும் அபிஷேகப் பொருள் ஒவ்வொன்றுக்கும் ஒரு அர்த்தம் இருக்கிறது. மனிதர் ஒவ்வொருவருக்கும் ஒரு துன்பம் இருக்கும். அதைப்போக்க இறைவனுக்கு அபிஷேகத்தைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுங்கள்.

1. சந்தனம் - - செல்வம் பெருகும்
2. எண்ணெய் - - மகிழ்ச்சி தரும்
3. பஞ்சாமிர்தம் - - வெற்றி
4. பால் - - வயது அதிகமாகும்
5. தயிர் - - குழந்தைச் செல்வம்
6. இளநீர் - - போகம், யோகம்
7. நெய் - - சொர்க்கம்
8. கரும்புச்சாறு - - நோய் போக்கும்
9. சர்க்கரை - - பகைவரை அழிக்கும்

துவ ஞானிகள், கவிஞர்கள், சிந்தனையாளர்கள், அமைதி விரும்புவோர், தனிமை நாடுவோர், உணர்ச்சி மிகுந்தோர், செயல் வகை விழைவோர் ஆகிய பலருக்கும் மன நிறைவு அளிக்க வல்லதாக, இந்து மதம் இனிய பற்பல சிறப்பியல்புகளைத் தன்னிடம் கொண்டுள்ளது."

**அன்னை வசந்தை :**

இவ்வாறே இங்கிலாந்தில் தோன்றியவரும் உலகப்புகழ் பெற்ற ஜார்ஜ் பென்னாட்ஷா, சார்லஸ் பிராட்லா முதலியவர்களோடு நட்புரிமை கொண்டு பழகிய பெருநாவலரும் பல நூல்களின் ஆசிரியையும் ஆகிய திருமதி. அன்னி பெஸண்ட் அம்மையார் அவர்கள் கூறியிருப்பதும் இங்கு நாம் அறிந்து பெரிதும் மகிழ்தற்குரியது.

"கடந்த 40 ஆண்டுகளுக்கும் மேலாக உலகின் பல்வேறு மதங்களையும் பற்றி ஆராய்ந்தறிந்த பிறகு இந்து மதம் என்னும் பெயரால் வழங்கி வருகின்ற சிறந்த சமயத்தைப் போன்று நிறைவுடையதும் அறிவார்ந்தும் ஆராய்ச்சி அனுபவங்களில் மிக்கதும் உயிர்க்கு உய்வளிக்கக் கூடியதும் ஆகிய சிறந்த மதம், வேறு பிறிது எதுவும் இல்லை என்று நான் உணருகின்றேன். அதனை எவ்வளவுக்கெவ்வளவு உணருகின்றோமோ, அவ்வளவுக்கவ்வளவு நாம் நேசிப்போம். எத்துணை அளவுக்கு நாம் அதனைப் புரிந்து நன்கு விளங்கிக் கொள்ளுகின்றோமோ, அத்துணை அளவுக்கு போற்றி மதித்து மகிழ்வோம்."

**வாழ்க இந்து மதம்;**

**வளர்க மக்கள் வாழ்வு.**

# ஸ்ரீ சடாரி

திரு. A.A. இராமானுஜ தாசன் - நெல்லை.

திருமகள்நாதன் திருவடிக்கீழ் அமர்ந்து புகுந்ததாக ஆழ்வார் தாமே பாசுரமிட்டருளியபடியாலும், திருமால் அடியார்களில் இவரே முதல்வர் ஆதலாலும் எம்பெருமானுடைய திருவடி நிலையை ஸ்ரீசடாரி என்றே திருநாமமிட்டு வழங்கலாயினர். "த்ரிமிடோபநிஷத்" எனப்படும் இவருடைய திருவாய்மொழி மற்றும் அருளிச்செயலை பாராயணம் செய்து நித்ய அநுஷ்டானம் செய்யாதவர்களிடம் திருமகள் நாதனுக்கு அன்பு ஏற்படாதாம் அதற்காக ஆழ்வார் தாமே எம்பெருமான் திருப்பாதத்தில் புகுந்து ஸ்ரீசடாரி வடிவங்கொண்டு அத்தகையவர் முடியிலே எழுந்தருளி அவர்களிடம் பகவானுக்கு பரிவு உண்டாகுமாறு செய்கின்றார். மேலும் சரணாகதி என்ற எளிய உபாயத்தைத் திருவாய்மொழி 1-1-1ல் அவன் துயரறு சுடரடி தொழுதெழு என் மனமே! என்ற அடியால் காட்டிக்கொடுத்தவர் நம்மாழ்வார். இப்படி நமக்கு நலம் திகழ் நாரணன் திருவடி சம்பந்தம் ஏற்படுத்திய காரணத்தினால் இவரை பிரபந்த ஜன கூடஸ்தர் என்பர். ஸ்ரீசடகோபர் ஸ்ரீசடாரி, ஸ்ரீசடஜித், ஸ்ரீசடரிபு என்கிற திருநாமங்களும் இவரைக் குறிக்கும். இந்த ஸ்ரீசடாரி என்பது எம்பெருமான் திருவடிக்கு முன்பாக இருக்கும் பாதுகைகள். கொண்ட ஒரு திருவடி நிலையாகும். சடம் என்னும் காற்றை தம்மேல் படாமல் தடுத்து உத்தம ஞானியாய் விளங்கியவராதலாலே இத்திருநாமம் ஏற்பட்டது. நம்மாழ்வாரே நாதன் பாதுகம் என்பதை ஆர்த்திப் பிரபந்தம் 10வது பாசுரத்தில் "பூமகள் கோன் தென்னரங்கர் பூங்கழற்குப் பாதுகமாய் தாம் மகிழும் செல்வச் சடகோபர் தேமலர்த்தாட்கு ஏய்ந்தினிய பாதுகமாம் எந்தை இராமானுசனை வாய்ந்தெனது நெஞ்சமே வாழ்" என்கிறார் மணவாளமாமுனிகள்.

ஸ்ரீசடாரியை கோயில் அர்ச்சகர்கள் சாதிக்கும்போது (வைக்கும் போது) அதன் மூலம் திருமால் திருவடி சம்பந்தம் நமக்கு ஏற்பட்டு விடுகிறது என்பதை முதன்முதலில் காட்டியருளியவர் ஆசாரியரான ஆளவந்தார். தமது ஸ்தோத்ர ரத்நத்தில் (3) வகுளாபிராம் ஸ்ரீமத்ததங்க்ரி யுகளம் பிரணமாமி [எனது தலையால் மகிழும் பூவின் நறுமணம் வீசும் அந்த ஆழ்வாருடைய இணையடிகளை வணங்குகிறேன்.] என்றதும் திருமால் திருவடிகளே அவர் தலையில் அலங்கரித்தனவாம். அந்த ஆச்சரியமும் மகிழ்ச்சியும் தோற்ற "யந்மூர்த்தி நிமே"...... பாதி (என் தலையில் பிரகாசிக்கிற) என்று பாதரவிந்தத்திற்கு பாசுரமிடுகிறார். அக்கருத்தினை தமிழில் நமக்கு அருளுகிறார். சந்தமிகு தமிழ்மறையோன் தூப்புல் வள்ளல்.

"தந்தையென நின்ற தனித் திருமால் தாளில்
தலை வைத்தோம் சடகோபனருளினாலே"

நமக்கு நம்மாழ்வார் சம்பந்தம் நாமாயிரம் ஏத்த நின்ற நாராயணன் துயரறு சுடரடியைப் பெறுவிக்கிறது என்று ஆரண தேசிகன் அருளிச் செய்தார்.

***

(தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை.

*சுபாங்க: சாந்தித: ஸ்ரஷ்டா*
*குமுத: குவலேசய: ।*
*கோஹிதோ கோபதிர் கோப்தா*
*வ்ருஷபாக்ஷோ வ்ருஷப்ரிய: ॥ 63 ॥*

**593.** சுபாங்க: இவ்வாறு பக்தி செய்வதற்கு (யோகத்திறகு) அங்கங்களாகிய யமம் நியமம் போன்றவற்றை நிறைவேற்றி வைப்பவன.

*சார்வே தவநெறிக்குத் தாமோதரன்*
*தாள்கள் (10-4-1)*

**594.** சாந்தித: இவர்களைத் தன்னிடம சேர்த்துக்கொண்டு சாந்தியைத் தருவோன.

*சன்ம சன்மாந்தரம் காத்து, அடியார்களைக்*
*கொண்டுபோய்த், தன்மை பெறுத்தித் தன்*
*தாளிணைக்கீழ்க் கொள்ளும் அப்பனை (3-7-7)*

[பெறுத்தி - பெயச் செய்து.]

**595.** ஸ்ரஷ்டா - கரண களேபரங்களை அளித்துப் படைப்பவன். போகத்தில் விருப்பமுள்ளவர்களுக்கு, அவரவர்களது கர்மத்திற்கு ஏற்றவாறு படைப்பவன்.

*துயரஞ்செய் மானங்களாய், மதனாகி,*
*உகவைகளாய் (7-8-7)*

[மானம்-அபிமானம், மதன்-களிப்பு, உகவை-காமம், விருப்பம்.]

**596.** குமுத: - இவ்வுலகினர் விரும்பும் போகங்களை அளித்துத் தானும் மகிழ்ந்திருப்பவன்.

**597.** குவலேசய: - இவர்களுக்கு அந்தர்யாமியாய் இவர்களை இயக்குவோன்.

*இவரும், அவரும், உவரும், ...யவரும் தன்*
*னுள்ளே ஆகியும், ஆக்கியும் காக்கும் (1-9-1).*

[இவ்வாறு அந்தர்யாமியாகிக் காப்பவன்.]

**598.** கோஹித: - இவ்வாறு பூமிக்கு (ஹிதம்) நன்மை செய்பவன்.

*என்னைத் தீமனம் கெடுத்தாய் (2-7-8)*

**599.** கோபதி: - போக பூமியான ஸ்வர்க்கத்திறகும் நாதன.

*ஊனம் இல் சுவர்க்கம் என்கோ? (3-4-7)*

**600.** கோப்தா - கரமத்தின் பயனான இந்தச் சக்கரத்தைக் காபபவன்.

*சாலப் பலநாள உகந்தோறும் உயிர்கள்*
*காப்பானே! (6-9-3)*

[உகம்-யுகம்.]

**601.** வ்ருஷபாக்ஷ: - தர்மத்தின் வழியாகக் கர்ம பலனகளைக் காப்பவன். தர்மமாகி சக்கரத்திற்குக் குடம் போன்றவன் - அதாவது ஆதாரமானவன்.

**602.** வ்ருஷப்ரிய: - இவ்வாறு ப்ரவருததி, நிவ்ருத்தி தர்மங்களை விருமபுவோன்.

*அநிவர்த்தீ நிவ்ருத்தாத்மா*
*ஸம்க்ஷேப்தா, க்ஷேமக்ருத் சிவ: ।*
*ஸ்ரீவத்ஸவக்ஷா ஸ்ரீவாஸ:*
*ஸ்ரீபதி: ஸ்ரீமதாம்வர: ॥ 64 ॥*

**603.** அநிர்வர்த்தீ - ப்ரவ்ருத்தி தர்மத்தில் ஊன்றியிருப்பவர்கள் மீண்டும் மீண்டும் பிறப்பதால், இவர்கள் பிதிர்லோகம் சேரும்படி செய்து, ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றாதவன்.

**604.** நிவ்ருத்தாத்மா - நிவ்ருத்தி தர்மத்தில் ஊன்றியிருப்பவர்களுக்கு உயிரானவன் (ஈச்வரனானவன்.)

*புகல் ஒன்றில்லா அடியேன், உன்அடிக்கீழ்*
*அமர்ந்து புகுந்தேனே (6-10-10)*

**605.** ஸங்க்ஷேப்தா - ப்ரவ்ருத்தி தர்மத்தில் ஊன்றியிருப்பவர்களுக்கு அறிவும் மகிமையும் குறுகும்படி செய்பவன்.

**606.** க்ஷேமக்ருத் - நிவ்ருத்தி தர்மத்தில் ஊன்றியிருப்பவர்களுக்கு அறிவும் மகிமையும் சுருங்காமல் விரிவாகுமாறு மோக்ஷமாகிய

க்ஷேமத்தை அளிப்பவன்.

செடியர் ஆக்கை அடியாரைச் சேர்தல்
தீர்க்கும் திருமாலை (1-5-7)

[அடியாரை, செடி ஆர்ஆக்கை தீர்க்கும் - கர்மத்தால் பெறும் சரீர சம்பந்தமில்லாமல் காக்கும் செடி-பாவம்.]

**607.** ஶிவ: - போகத்தையும் மோக்ஷத்தையும் விரும்பும் நல்லவர்களுக்கு நன்மை செய்ப வன்.

ஆழியான், அருள்தருவான் அமைகின்றான்
(10-6-1)

## 24. மங்களகரன்

[லக்ஷ்மி திருமார்பில் உறைவதால், இவனது பெருமை.]

**608.** ஸ்ரீவத்ஸவக்ஷா: - இவன் லக்ஷ்மிக்கு நாயகனாகிய அறிகுறியாக ஸ்ரீவத்ஸம் என்ற மச்சமாக திருமார்பில் அமைந்துள்ளவன்.

திருமறு மார்பன் என்கோ? (3-4-3)

**609.** ஸ்ரீவாஸ: - பிராட்டி (லக்ஷ்மீ) தன் னோடு என்றும் ரமிப்பதற்குக் கற்பக மரமாக இருப்பவன். (நான்கு புயங்கள் கற்பகத்தருக் கள் என்பது கருத்து.)

உன் திருமார்வத்து மாலை நங்கை
(10-10-2)

[திருமார்பிற்குப் பிராட்டி அலங்காரம்.]

கற்பகக் காவன நற்பல தோளற்கு
(6-6-6)

[கற்பக கர அன - கற்பகச் சோலைபோல்]

**610.** ஸ்ரீபதி: - பிராட்டிக்கு நாதன்.

மணாளன் மலர் மங்கைக்கும் (9-8-5)

**611.** ஸ்ரீமதாம்வர: - செல்வச் சிறப்பு வாய்ந்த பிரமன் முதலோர்களிலும் சிறந்தவன்.

தெய்வக் குழாங்கள் கைதொழக் கிடந்த,
தாமரை உந்தித் தனிப்பெரு நாயக! (திருவா.1)

ஸ்ரீத: ஸ்ரீஶ: ஸ்ரீநிவாஸ:
ஸ்ரீநிதி: ஸ்ரீவிபாவந: ।
ஸ்ரீதர: ஸ்ரீகர: ஶ்ரேய:
ஸ்ரீமாந் லோகத்ரயாஶ்ரய: ॥ 65 ॥

**612.** ஸ்ரீத: - விஷ்ணுபத்நீ என்ற மேன் மையை இவளுக்கு அளித்தவன்.

திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை
(10-6-9)

**613.** ஸ்ரீஶ: - பிராட்டியின் பெருமைக்குக் காரணமானவன்; ஜீவன ஆதாரமாக இருப் பவன்.

எல்லா நிலைகளிலும் இவளால் நியமிக் கப்பட்டவன்.

திருவருள் அருளால் அவன் சென்று சேர்
தண் திருப்புலியூர் (8-9-6)

**614.** ஸ்ரீநிவாஸ: - நந்தன வனத்திலுள்ள கொடிக்குக் கற்பகத் தருவைப்போல், இவ ளுக்கு எப்போதும் சேரும் இடமானவன். கொள்கொம்பு போல் விளங்குபவன்.

திருவிடமே மார்பம் (2-5-2)

**615.** ஸ்ரீநிதி: - ரத்னத்திற்குப் பெட்டி போல் பிராட்டியைத் தன்மார்பில் வைத்துக் காப்பவன்.

மானேய் நோக்கி மடவாளை மார்பில்
கொண்டாய் மாதவா! (1-5-5)

**616.** ஸ்ரீவிபாவந: - இவ்வாறு பிராட்டியால் தனக்குச் சிறப்பு வாய்ந்தவன்.

அல்லி மாதர் அமரும் திருமார்பினன்
(9-10-9)

**617.** ஸ்ரீதர: - மணிக்கு ஒளிபோலவும், மல ருக்கு மணம் போலவும் பிராட்டியுடன் எப் போதும் இணைந்திருப்பவன். இவளை இயல் பாகவே திருமார்பில் ஏற்றவன்.

திருவொடு மருவிய இயற்கை
(திருவா. 1)

**618.** ஸ்ரீகர: - பரத்வத்தில் போல மற்றை நிலைகளிலும் தனக்கு உதவுமாறு பிராட் டியைக் கொள்பவன்.

நம்பனை, ஞாலம் படைத்தவனைத்,
திருமாலை (3-7-8)

**619.** ச்ரேய: ஸ்ரீமாந் - எல்லாவித புருஷார்த் தங்களும் அடைவதற்கு ஆதாரமான பிராட் டியோடு நித்யமாக விளங்குவோன்.

*வண்கமலத் திருமாதினைத் தடங்கொள்*
*தார் மார்பினில் வைத்தவர்* (4-2-7)

**620.** லோகத்ரயாச்ரய: - லோகமாதாவான இவளோடு கூடி மூவுலகங்களுக்கும் ஆதார மானவன்.

*என்றும் திருமெய் உறைகின்ற செங்கண்மால்*
*.....என்னை ஆள்கின்றானே* (10-4-2)

*ஸ்வக்ஷ: ஸ்வங்க: சதாநந்தோ*
*நந்திர் ஜ்யோதிர் கணேச்வர: ।*
*விஜிதாத்மா விதேயாத்மா*
*ஸத்கீர்த்திச் சிந்நஸம்சய: ॥ 66 ॥*

**621.** ஸ்வக்ஷ: - இப்பிராட்டியின் பேரழகா கிய பெருங்கடலின் கரைகண்ட திருக்கண்கள் போன்ற திவ்ய இந்த்ரியங்கள் வாய்ந்தவன்.

*சிரீஇதரன் செய்ய தாமரைக்கண்ணன்* (2-7-9)

[திருமார்பில் உறையும் பிராட்டியைக் காண் பதால் சிவந்து அழகிய கண்கள் உடைய வன்.]

**622.** ஸ்வங்க: - இவளும் மேல் விழுந்து அனுபவிக்குமாறு அழகிய திருமேனி வாய்ந் தவன்.

*மையகண்ணாள், மலர்மேல் உறைவாள்*
*உறைமார்பினை* (4-5-2)

**623.** சதாநந்த: - தானும் பிராட்டியும் ஒரு வர்க்கொருவர் கொள்ளும் பிரேமாதிசயத் தால், பேரானந்தம் கரைபுரண்டு மேன்மேலும் பெருகப் பெற்றவன்.

*உன்தாமரை மங்கையும் நீயும்* (9-2-3)

**624.** நந்தி: - பிராட்டியாலே இவ் வாறு எல்லா இடங்களிலும், எக்காலத்திலும், எல்லா வகையாலும் நிறைவு பெற்றவன்.

*நம்பியை* (1-10-9)
[இவ்வாறு பூர்ணனானவனை]

**625.** ஜ்யோதிர்கணேச்வர: - இவ்வாறான சேர்த்தியாலே, ஒளிமயமாய் விளங்கும் நித்ய சூரிகளின் கணங்கள், தன்னை அடிபணிந்து கைங்கர்யம் செய்யப்பெற்றவன்.

*இமையோர்கள் குழாம் தொழுவதும் சூழ்வதும்*
*செய் தொல்லைமாலை* (தி.விரு.97)

[இதுவரையில் பரத்வத்தால் சிறப்பு விவ ரிக்கப்பெற்றது. இனி ஸௌசீல்யத்தால் பெருமை விளக்கப்படுகிறது.]

**626.** விஜிதாத்மா - பிராட்டியோடு இவ் வாறு பெருமையுடன் இணைந்திருந்தாலும், அடியாரிடம் வசப்பட்ட மனம் வாய்ந்தவன்.

*ஆய்கொண்ட சீர்வள்ளல் ஆழிப்பிரான்*
*எனக்கே உளன்*

**627.** விதேயாத்மா - அடியார் தன்னை விதிக்கும்படி விளங்குவோன்.

*எற்பரன்* (2-7-11)

[என் விருப்பப்படி செய்பவன்.]

**628.** ஸத்கீர்த்தி: - இவ்வாறு எளிமை வாய்ந் திருந்தும் சிறந்த கீர்த்தி வாய்ந்தவன்.

*கேடு இல் விழுப் புகழ்க் கேசவன்* (3-10-11)
*சிறந்த கீர்த்தித் திருக்குறுங்குடி*
*நம்பியை* (5-5-7)

**629.** சிந்நஸம்சய: - இவ்வாறு மேன்மை வாய்ந்த இவன் வசப்படுவானோ என்ற சங் கையைத் தீர்த்தவன்.

*பத்துடை அடியவர்க்கு எளியவன்* (1-3-1)

[பத்து-பக்தி]

*உதீர்ண: ஸர்வதச் சக்ஷு*
*ரநீச: சாச்வதஸ் ஸ்திர: ।*
*பூசயோ பூஷணோபூதிர்*
*அசோக: சோகநாசந: ॥ 67 ॥*

**630.** உதீர்ண: - (எப்படி எனில்) ஞானக்கண் ணலல்லாமல் ஊனக் கண்ணாலும் காணு மாறு அவதரிப்பவன்.

*கண்டு களிப்பக் கண்ணுள்நின்று*
*அகலானே* (10-8-7)

**631.** ஸர்வதச் சக்ஷு: - யாவரும் காணு மாறு அவதரித்து, எல்லா இடங்களிலும், எல்லார் கண்ணுக்கும் புலப்படுவோன்.

*எங்கும் தானாய, நங்கள் நாதனே*
(1-8-9)

**632.** அநீச: - அன்பர்களது விருப்பப்படி நடந்துகொள்வதால், அவர்களுக்கு வசப்பட்டிருப்பவன்.

*என் இசைவினை* (1-7-3)

[அவனைப் பெறுவதற்கு என் இசைவாக இருப்பவனை.]

**633.** சாச்வதஸ் திர: - தன்னை எப்போதும் அனுபவிப்பதற்கு அர்ச்சை வடிவில் மிளிர்பவன்.

*அடியேன் மேவி அமர்கின்ற அமுதே....திருவேங்கடத் தெம்பெருமானே* (6-10-7)

[அமர்கின்ற-உண்கின்ற.]

**634.** ஸூசய: - அன்பர் தன்னை வணங்குவதற்காக அமைத்த திருக்கோயில்களில் ஸுகமாக எழுந்தருளியிருப்பவன்.

*நெஞ்சினால் நினைப்பான் எவன், அவனாகும் நீள்கடல் வண்ணனே* (3-6-9)

[திருக்கோயில்களில்.]

**635.** பூஷண: - இந்த ஸௌலப்ய குணமே தனக்கு ஆபரணமாக விளங்குவோன்.

*என்னுள் கலந்தவன் செங்கனிவாய் செங்கமலம்* (2-5-3)

[இவனுக்கு வாய் செங்கமலம்.]

**636.** பூதி: - இவர்களுக்கு எல்லா வகைச் செல்வமாகவும் இருப்பவன் - தாய், தந்தை, மக்கள், சுற்றம், செல்வம் யாவுமாக இருப்பவன்.

*தாயாய்த், தந்தையாய், மக்களாய், மற்றுமாய், முற்றுமாய்-நீயாய் நீ நின்றவாறு* (7-8-1)

**637.** அசோக: - அன்பர்களைக் காப்பாற்றி வருவதால், இவர்களை இழந்தோம் என்ற சோகம் இல்லாதவன்.

*துயரம் இல் சீர்க் கண்ணன் மாயன்*
(3-10-6

**638.** சோகநாசந: - தன்னைப் பிரிவதால் அன்பர்க்கு ஏற்படும் சோகத்தைப் போக்குவோன்.

*அவன் என்னுள் இருள்தான் அற வீற்றிருந்தான்* (8-7-2)

[இருள் தான் அற - வேறு எதுவும் புருஷார்த்தமாகக் கருதாமல்]

*அர்ச்சிஷ்மா நர்ச்சித: கும்போ*
*விசுத்தாத்மா விசோதந: ।*
*அநிருத்தோऽப்ரதிரத:*
*ப்ரத்யும்நோऽமிதவிக்ரம: ॥ 68 ॥*

**639.** அர்ச்சிஷ்மாந் - தனது மேன்மை ஒருபுறம் இருக்க, அன்பர்களது அகக்கண்ணையும் புறக்கண்ணையும் திறக்கும் திறமையுள்ள (அப்ராக்ருதமான) தனிப்பட்ட காந்தி வாய்ந்தவன்.

*அச்செம்பொனே திகழும் திருமூர்த்தியை*(1-7-3)

*என் மாணிக்கச்சோதியை* (1-10-9)

**640.** அர்ச்சித: - அர்ச்சாமூர்த்தியாய் அர்ச்சிப்பதற்கு எளியவன்.

*என் கனிவு ஆர் வீட்டின்பமே* (2-3-5)

[வீட்டு இன்பம் - நமது வீட்டிலும் உறைந்து நமக்கு இன்பம் அளிப்பவன்.]

**641.** கும்ப: - வடிவழகு, கல்யாண குணங்கள் இவற்றால் அன்பரால் விரும்பப்படுவோன். அர்ச்சையில் தன்னை வணங்குவோர்க்கு யமபடர்களால் பயம் நேராதவாறு காக்கும் இயல்புடையவன்.

*நமனுக்கு இங்கு யாதொன்று மில்லை*
(5-1-1)

**642.** விசுத்தாத்மா - இவ்வாறு அடியார்களோடு பழகுவதால், பரிசுத்தமானவன்.

*நவை இல் திருநாரணன்* (9-8-3)

[நவை இல் - தூயவனான.]

**643.** விசோதந: - அன்பர்களை பரிசுத்தம் செய்பவன்.

*மேவும் தன்மையனாக்கினான் வல்லன் எம்பிரான் விட்டுவே* (2-7-4)

[மேவும் - தன்னை அடையுமாறு, தன்மையன் - தகுதியுள்ளவன், விட்டு-விஷ்ணு.]

## 25. க்ஷேத்ரங்கள்

**644.** அநிருத்த: - அநிருத்த வ்யூகத்தின் அவதாரமாகிய ஜநார்த்தனன் வஸுபாண் டம் என்று ஸ்தலத்தில் உறைபவன்.

**645.** அப்ரதிரத: - ஜநார்த்தனன் ஆகை யாலே, தான் விரும்பாத தீயோரை அழிக்கும் வகையில் தனக்கு வேறொரு ரதம் எதிர்நிற் காமல் விளங்குவோன். அதாவது எதிர்ப்பு எதுவும் இல்லாதவன்.

**646.** ப்ரத்யும்ந: - சிறந்த ஆத்ம ப்ரகாசம் வாய்ந்தவன், தன்னைத் தானே தோற்று விப்பவன்.

**647.** அமிதவிக்ரம: - மூவுலகங்களிலும் காணாத பராக்ரமம் வாய்ந்தவன். த்ரிவிக்ரம அவதாரத்தில் தனது திருவடிக்கு மூவுலகும் போதாதவன்.

*ஆற்றல் மிக்கான் பெரிய பரஞ்சோதிபுக்கு அரியே* 7-6-10)

*காலநேமிநிஹா சௌரிச்*
*சூரச் சூரஜநேச்வர: |*
*த்ரிலோகாத்மா த்ரிலோகேச:*
*கேசவ: கேசிஹா ஹரி: || 69 ||*

**648.** காலநேமி நிஹா: - இவ்வாறான க்ஷேத்ரங்களில் உறைந்து கலியின் கொடு மையாகிய காலசக்கரத்தைத் தகைவோன்.

*மருள் இல்வண் குருகூர்* (2-10-11)

[மருள் இல்- அறிவின்மை இல்லாத கலியால் விளையும் அறிவின்மை காணமுடியாத.]

*நல்லார் நவில் குருகூர்* (திரு.விரு.100)

**649.** சௌரி: - திருக்கண்ணபுரத்தில் உத் பலா வதக விமானத்தில் விளங்குவோன்.

*திருக்கண்ணபுரத்தரணி ஆளன்* (9-10-5)

**650.** சூர: - சித்ரகூடத்தில், ராக்ஷஸ ஸம் ஹாரம் செய்த ராமனாக விளங்குவோன்.

*இலங்கைக் குழாநெடு மாடம் இடித்த பிரானார்* (தி.விரு.36)

**651.** சூரஜநேச்வர: - சூரர்களான சுக்ரீவன் போல்வார்க்குத் தலைவன்.

**652.** த்ரிலோகாத்மா - அன்பர்களை அநுக்ர ஹிப்பதற்காக மூன்று உலகங்களிலும் செல் பவன், த்ரிலோகநாதன் என்ற திருநாமத்தோடு மகத தேசத்தில் எழுந்தருளியிருப்பவன்.

**653.** த்ரிலோகேச: - மூன்று உலகங்களுக்கும் ப்ரபு. ப்ராக்ஜோதிஷ பட்டணத்தில் விச்வேச் ரன் என்ற திருநாமத்தோடு விளங்குவோன்.

**654.** கேசவ: - கேசவன் என்ற திருநாமத் தோடு காசியிலும், வடமதுரையிலும் எழுந் தருளியிருப்பவன்.

**655.** கேசிஹா: - கேசி என்ற குதிரையை (குதிரை வடிவில் வந்த அசுரனைக்) கொன் றவன்.)

*மா வாய் பிளந்தார்* (பெ.திரு. 50)

[மா-குதிரை.]

**656.** ஹரி: - ஹரி என்ற திருநாமத்தோடு கோவர்த்தனம் என்ற ஸ்தலத்தில் இருப்ப வன்.

*அரியாய அம்மானை, அமரர் பிரானை* (9-4-5)

(தொடரும்)

### திருமாலின் சயனங்கள்

1. திருப்புல்லாணி - தர்ப்பசயனம்
2. மகாபலிபுரம் - தல சயனம்
3. கும்பகோணம் - உத்தான சயனம்
4. திருநீர்மலை - மாணிக்க சயனம்
5. ஸ்ரீவில்லிப்புத்தூர் - வடபத்ரசயனம்
6. சிதம்பரம் - போக சயனம்
7. இந்தளூர் - வீரசயனம்
8. ஸ்ரீரங்கம் - புஜங்க சயனம்

தொகுத்தவர் : அம்புஜம் முராரி - சேலம்.

# ‘சேஷபட’மும் மணவாள மாமுனிகளும்

கிருஷ்ணா துளஸி

ஓராண்வழி பூர்வா சார்ய மாலையில் கடைசி ஆசார்யராக மாமுனிகள் விளங்குகிறார். இவருடைய பெருமைகள் சொல்லிலடங்கா. இவருடைய அர்ச்சா விக்கிரகங்களின் சிறப்பு. இவருடைய சிரஸஸை சேஷபடத்துடனேயே காணப்படுவதாம். இவரது திருவுருவை வரைந்துள்ள ஓவியர்களும் இவர்க்கு இவர் பிடரியிலிருந்து பின்புறம எழுந்துயர்நது குடைபோல கவிழ்நது இருக்கும் சேஷபடத்தை வரைந்துள்ளனர். இம்மாதிரி அமைபபு ராகு என்ற கிரகத்திறகும் மாரியம்மன் போன்ற அம்மன் விக்கிரகஙகளுக்கும் இருப்பதைக் காண்கின்றோம். இந்த விக்கிரகங்களுக்குப் போல் உடலில ஒரு பகுதியாக நாக படத்தை மாமுனிகளுக்கு வரைந்திருப்பது பொருத்தமல்ல என்பது நமக்குப் புரியும்.

மாமுனிகள் ஆதிசேஷனின் அவதாரம் ஆனதால் அதைக் குறிப்பால் உணரத்துவதறகு இந்த சேஷ படத்தை வைத்துளளனர் என்று சொல்லுவர சிலர். ஸ்வாமி எம்பெருமானாரும் ஆதிசேஷனின் அவதாரமே ஆவர். அங்ஙன மிருக்க யாண்டும் அவருடைய அர்ச்சைத் திருமேனியிலோ, ஓவியப்படிமங்களிலோ நாகபடக்குடை அமைப்பு காணப்படவில்லை. ஆகையினால் சேஷாவதாரம் என்ற காரணத்தினால் இந்த நாகக்குடை அமைந்துள்ளது என்பது ஏற்புடைத்தன்று. மேலும் உடமபின் ஒரு பகுதியாக இக்குடை அமைத்தல் தவறு என்று கூறினோம. அப்படியெனுல் ஆதி சேஷன் உருவத்தையும் மாமுனிகளையும இணைதது ஒரு சிந்தனை ஏற்பட்டதற்கும் சேஷ குடையில்லாமல அவரது விக்கிரகப்படிமங்கள சேஷ வாகனத்தில் அமைந்ததற்கு வரலாறறை ஆராயந்து காணவேணடியுள ளது. மாமுனிகளின வரலாற்றைக் கூறும யதீநதிரப் பிரவணப் பிரபாவம் ஸ்ரீரஙகநாதன ஸவாமிக்கு சேஷபீடம அருளினார என்ற குறிப்பு உள்ளது. அதற்கு விரிவு தேவை. அதை ஆராய்ந்து கூறுவதே இக்கட்டுரையின் நோக்கம.

ஒரு சமயம ஸ்ரீரங்கநாதன் மாமுனிகளைத் தம முன்னிலையில் கருட மணடபததில் திருவாயமொழியை ஓர உரு ஈட்டுடன் விரித்துரைக்க ஆணையிடடருளினார. ஓராண்டு காலத்திறகு தம் உதஸவஙகளையும் நிறுத்திவிடடு ஈடு காலக்ஷேபததைக கேடடு வநதார். இந்த காலக்ஷேபத்தின் இறுதியில் சாற்று மறையன்று அரங்கனே ஓர பாலகனாய் வந்து, ஆசார்ய புருஷர்களிடையே வந்து நின்று, ஸ்ரீசைலேசத்தனியனை சிஷயனாய தானுகநத இருப்பை ஒட்டி ஸ்வாமிக்கு உறுதுணையாக அர்ப்பணித்துகந்தான். காலக்ஷேப சாறறுமறை முடிந்து தனியன் சமர்ப்பித்ததறகுப் பிறகு மேலும் ஸ்வாமிக்கு வரிசைகள் அருள விரும்பினான். தானளிக்கும் வரிசைகளில் மிகச் சிறந்ததான பிரும்மரத மரியாதையையும் செய்து மகிழ்ந்தான். இந்த பிரும்மரத மரியாதை என்பதுதான் அழகிய மணவாளன் அளிக்கும் சிறப்புகளில் மிக உயர்ந்ததாகும். இநத மரியாதையை இன்றும் பட்டர் வழித்தோன்றல்களான பராசர வேதவ்யாச பட்டர்களும், அரையர்களும் ஆண்டுதோறும் முறையே கைசிக ஏகாதசி மகாத்மிய படனத்திற்குப் பின்பு துவாதசி விடியற்காலையிலும், அத்யயன உத்ஸவ இறுதியிலும் பெற்று வருகின்றனர். இம்மரியாதை மேல் வீடு தந்தருளுவது போனறதை குறிப்பால் உணர்த்தும் என்பர்

பிரும்மரதத்திற்கு உரியவர்களை பெருமாளுடைய மரத் தோளுக்கினியனில் பெருமாள் கொடுததருளிய மாலை தொங்கு பரிவட்டம் முதலிய பிரம் மாலங்காரங்கள் செய்வித்து அவரை இக்கேடயததில் எழுந்தருளச்செய்து கோயில் எடுபிடிகள் பரிஜனங்களுடன் கோயில் ஸ்ரீபாதம் தாங்கிகளே ஸ்ரீபாதம் தாங்கி வீதி வலம வந்து, அவரது திருமாளிகையைச் சென்று சேர்ந்ததும் அவர் கோயில் பரிஜனங்களுக்கு மரியாதை ஸம்பாவனைகள் செய்விப்பது வழக்கம். கேடயம படிச்சடடம், தோளுக்கினியன் எனபன ஒரு பொருள் பல சொற்களாம்.

இதுபோன்ற மரியாதையை மாமுனிகளுக்கு அந்த காலக்ஷேப முடிவில் அரங்கன அருளினான். அப்பொழுது அவன்

தான் மிகவுவகுகும் திருவனந் தாழ்வான் வாகனத்தில் (சேஷ வாகனத்தில்) ஸ்வாமிக்கு பிரும் மரதமரியாதையை ஸங்கல்ப்பித் தருளி அவரை திருமடத்திற்கு சமஸ்த கோயில் மரியாதை களுடனும் பரிஜனங்களுடனும் எழுந்தருளுவித்தான். அங் ஙனமே மாமுனிகள் பெருமா ளுடைய சேஷ வாகனத்தில் அமர்ந்து பிரும்மரதம் கண்ட ருளி, திருமடம் ஏற எழுந்தரு ளினார்.

பெருமாள் அளித்த இச்சிறப் பினைக் குறிக்கவே மணவா ளமாமுனிகளை சேஷ வாக னத்தில் உள் அமரச்செய்து அர்ச்சா விக்கிரகங்கள் ஏற்பட் டுள்ளன. இதுவே ரங்க நாதன் இவருக்கு சேஷபீ டத்தை அளித்து, சிறப்பித்தரு ளினான் என்பதற்கு விளக்கமா கும். சேஷபீடம் என்பது சேஷ வாகனத்தையே இங்கு குறிக் கிறது. ஆகையினால் ஸ்வா மிக்கு பிடரியிலிருந்து நாக படக்குடை அமைத்துக் காட்டு வது தவறு என்றும், சேஷவா கனத்தில் அமரச்செய்வதே சரி யானது என்றும், பிரும்மரதம் கண்டருளிய அவசரத்தில் விக்ர ஹத்தை அமைத்தனர் என்பதும் பெறப்பட்டது காண்க.



# துவாபரயுகங்களும், பதவி வகித்த வேதவியாசர்களும்

வேதங்களை நான்காகப் பிரித்தவர் வேதவியாசர். இதை பள்ளிப பிள்ளைகளும் அறிவர்.

வேத வியாசர் என்பது ஒவ்வொரு துவாபரயுகத்துக்கும் (3ஆம் யுகம்) ஏற்படுத்தப்பட்ட பதவியே ஆகும். இப்போது நடப்பது 7ஆம் மனுவந்தரம். 28 சதுர்யுகங்கள் சென்றன.

| துவாபரயுகம் | வேத வியாசர் |
|---|---|
| முதலாம் துவாபரயுகம் | பிரம்மா |
| 2 | - வைவஸ்தவ மனு |
| 3 | - சுக்கிரர் |
| 4 | - பிரகஸ்பதி |
| 5 | - சூரியன் |
| 6 | - இயமன் |
| 7 | - தேவேந்திரன் |
| 8 | - வசிஷ்டர் |
| 9 | - சாரசுவதர் |
| 10 | - திரிதாமா |
| 11 | - திரிவிருஷா |
| 12 | - பாரத்வாஜ மாமுனிவர் |
| 13 | - சுந்தரிஷர் |
| 14 | - தருமி |
| 15 | - திரையாருணி |
| 16 | - தனஞ்சயன் |
| 17 | - கிருதஞ்சயன் |
| 18 | - சஞ்சயன் |
| 19 | - கௌதமர் |
| 20 | - ஹரியாத்துமா |
| 21 | - உத்தமர் |
| 22 | - வாஜிசிரவன் (வேனன்) |
| 23 | - திருணபந்து (சோமகஷ்மாயணன்) |
| 24 | - வால்மீகி (பார்க்கவரிசஷர்) |
| 25 | - சக்தி |
| 26 | - பராசரர் |
| 27 | - ஜாதுகர்ணர் |
| 28 | - கிருஷ்ணத் துவைபாயணர் (பராசரரின் பிள்ளை) |

இனி வரவிருக்கும் 29ஆம் துவாபர யுகத்துக்கு துரோண குமாரனான அசுவத்தாமாவே வேத வியாசர். அசுவத்தாமா இப்போது இமயமலையில் வசித்து வருவதாக சிலர் கூறுவர். 7 சிரஞ்சீவிகளில் ஒருவர்.

தொகுத்தவர் : திருமதி. ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீவேங்கடேச ப்ரபத்தி

ஸ்ரீமான் உ.வே. திருமலை
அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர்-திருப்பதி.

மந்மூர்த்நி காளியபணே
விகடாடவீஷு
ஸ்ரீவேங்கடாத்ரி சிகரே சிரஸி
ச்ருதீநாம் ।
சித்தேऽப்யநந்யமநஸாம்
ஸமமாஹிதௌ தே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்
ப்ரபத்யே ॥ (12)

(ப.) ஸ்ரீ வேங்கடேச = திருவேங்கடமுடையானே, மத் மூர்த்நி = என்தலையிலும், காளிய பணே = காளியநாகத்தின் தலையிலும், விகட அடவீஷு = கொடிய காடுகளிலும், ஸ்ரீவேங்கடாத்ரி சிகரே = திருவேங்கடமலையின் சிகரத்திலும், ச்ருதீநாம் சிரஸி = வேதங்களின் தலையாகிய உபநிஷத்துக்களிலும், அநந்யமனஸாம் = உன்னையே நினைக்கும் மனமுடைய பெரியோர்களுடைய, சித்தே அபி = மனத்திலும், ஸமம் = ஒரேவிதமாக, ஆஹிதௌ = வைக்கப்பெற்ற, தே சரணௌ = உன் திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருவேங்கடவா, உன்னையே த்யானிக்கும் ஆழ்வார்களாகிற பெரியோர்களின் திருவுள்ளங்களிலும், அவர்கள் ஆதரித்துப்போற்றும் வேதாந்தங்களிலும், அவ்வேதம் புகழும் திருவேங்கடமலையுச்சியிலும், அவ்வாறு பெருமை சிறிதுமில்லாத என் தலையிலும் கொடிய காளியன் தலையிலும், பயங்கரமான காடுகளிலும, வேற்றுமை பாராமல் நீ வைத்த உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன்.

(வி) மநமூர்த்நி = மிகவும் நீசனானஅடியேனுடைய தலையில் என்றபடி. கீழே ஸ்தோத்ரத்தில் 'அபராதசதை: பரிதம்' (3) 'அஜ்ஞாநிநா மயா தோஷாந் அசேஷாந் விஹிதாந்' (11) என்று அறிவிலியாகவும் அது காரணமாக ஒன்றுவிடாமல் செய்த பாபங்களால் நிறைந்தவராகவும் தம்மைப்பற்றி நைச்யாநுஸந்தாநம் செய்து கொண்டாரன்றே? அதற்கேற்ப இங்கு 'மந்மூர்த்நி' என்று மிகத்தாழ்ந்த அடியேனுடைய தலையிலும் திருவடிகளை வைத்தருளிற்றே என்கிறார்.

காளியபணே - துஷ்டகாளியனென்று பிரசித்தி பெற்று யமுனையைச் சேர்ந்ததோர் மடுவைத் தன் விஷாக்நியால் தூஷித்து அதில் நீராடவும் நீர் பருகவும் முடியாமல் இடையர்களுக்குத் தீங்கு செய்து வந்த பாம்பின் தலையிலே, 'காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு அவுன் நீண் முடியைந்திலும் நின்று நடஞ்செய்து' (பெரியாழ் 3-9-7) என்றும், 'காலால் காளியன் தலை மிதித்ததும்' (பெருமாள் 7-9) என்றும் ஆழ்வார்கள் அருளிச்செய்தபடியே தேவரீர் திருவடிகளை வைத்தருளிற்று என்கிறார். எம்பெருமான் மனுஷ்ய ஜாதிக்குக் கொடுத்த பகுத்தறிவைப் பயன்படுத்தி நல்வழியில் செல்லாமல் தீமையே செய்து போந்த தம்மைவிட, ஸர்ப்பஜாதியில் பிறந்து பகுத்தறிவின்றித் தெரியாமல் துஷ்டத்தனம் செய்த காளியன் உயர்ந்தவனென்பது ஆசிரியர் திருவுள்ளம். மேலும் இங்ஙனமே காணலாம். விகடாடவீஷு - கொடிய காடுகளில். 'பொருந்தார் கைவேல் நுதி போல் பரல்பாய மெல்லடிகள் குருதி சோர விரும்பாத கான் விரும்பி வெயிலுறைப்ப வெம்பசிநோய் கூர' (பெருமாள் 9-5) என்று குலசேகரப்பெருமாளும், 'மானமருமென்னோக்கி வைதேவியின் துணையா கானமருங் கல்லதர்போய்க் காடுறைந்த பொன்னடிகள் (பெரிய 11-5-1) என்று திருமங்கையாழ்வாரும அருளிய படியே இராமாவதாரத்திலும், 'குடையும் செருப்புங்கொடாதே தாமோதரனை நான் உடையும் கடியன ஊன்றுவெம்பரற்களுடை கடிய வெங்கானிடைக் காலடிநோவக் கன்றின் பின் கொடியேன் என் பிள்ளையைப் போக்கினேன்' (பெரியாழ் 3-2-9) என்று யசோதை பாவனையில் பெரியாழ்வாரும் அருளிய படியே க்ருஷ்ணவதாரத்திலும், முள்ளுங்கல்லுமான காடுகளில் திருவடிகளை வைத்தருளிற்று என்கிறார். தெரிந்தோ தெரியாமலோ துஷ்டத்தனம் செய்தற்குக் காரணமான சைதன்யமுடைய காளியனைவிட அசேதனமான காடுகள் உயர்ந்தன வென்று ஆசிரியர் கருத்து.

'பொன்னை மாமணியை அணியார்ந்ததோர் மின்னை வேங்கடத்துச்சியில் கண்டு போய்' (பெரிய 10-1-2) என்றும் எந்தாய் தண் திருவேங்

கடத்துள் நின்றாய்' (திருவாய் 2-6-9) என்றும் ஆழ்வார்கள் அருளியபடியே திருமலைச்சென்னியில் திருவடிகளை வைத்தருளிற்று என்கிறார். இவ்வுலகத்திலுள்ள ப்ராக்ருதமான காடுகளைவிட ஸ்ரீவைகுண்டத்திலிருந்து பெரிய திருவடியால் கொண்டுவரப்பட்டதாகப் புராணங்களில் கூறப்படுகின்ற அப்ராக்ருதமான திருவேங்கட மலை உயர்ந்ததென்பது ஆசிரியர் கருத்து.

ச்ருதீநாம் சிரஸி - நித்யம் ச்ரூயதே இதி ச்ருதி:=எப்போதும் கேட்கப்பட்டுவருவதனால் வேதம் ச்ருதி எனப்படுகிறது. ஒரு புருஷனால் இயற்றப்படுவதற்கு முன்பு கேட்கப்படாமலிருந்து, இயற்றப்பட்ட பின்பு கேட்கப்படுகின்ற பிற நூல்களைப் போலல்லாமல் எல்லாக் காலத்திலும் ஒரே விதமாகக் கேட்கப்பட்டு வருதலால் ச்ருதியென்று பெயர் பெற்ற வேதமானது அபௌருஷேயமென்றும் நித்யமென்றும் நிர்த்தோஷமென்றும் போற்றப்படுகிறது. அதன் முற்பகுதி கர்மகாண்டமென்றும் பிற்பகுதி ப்ரஹ்மகாண்டமென்றும் பெயர்பெறும். இங்கு 'ச்ருதிகளின் சிரஸ்ஸு' என்பதனால் ச்ருதிகளில்_ தலைபோல் உயர்ந்த இரண்டாம் பிரிவான ப்ரஹ்ம காண்டம் குறிக்கப்படுகிறது. 'வேதை: ச ஸர்வை: அஹமேவ வேத்ய:' (கீதை 15-15) = பூர்வோத்தர பாகங்களான எல்லாவேதங்களாலும் நானே அறியப்படுகிறேன் என்று பகவான் தானே அருளியிருப்பதனாலும், 'ஸர்வே வேதா: யத்பதம் ஆமநந்தி' (கடோப 2-15) = வேதங்கள் அனைத்தும் எந்த பகவத் ஸ்வரூபத்தை அறிவிக்கின்றனவோ என்று உபநிஷத்து கோஷித்துள்ளதனாலும் வேதங்களெல்லாவற்றிலுமே எம்பெருமான் பேசப்பட்டிருந்தாலும் (எம்பெருமானுடைய திருவடிகள் வைக்கப்பட்டிருந்தாலும்) ச்ருதி சிரஸ்ஸாகிற உபநிஷத்தென்னும் ப்ரஹ்மகாண்டத்தில் மட்டும் அவன் திருவடிகள் வைக்கப்பட்டிருப்பதாகக் குறிப்பிட்டது பூர்வ பாகத்தைவிட உத்தரபாகமான ப்ரஹ்மகாண்டத்துக்குள்ள ப்ராதான்யத்தைப் பற்றவாகும். கருமகாண்டத்தில் கருமங்களால் ஆராதிக்கப்படுகின்ற அக்நி-இந்திரன் முதலியதேவர்களுக்கு அந்தர்யாமியாக பகவான் மறைத்துப் பேசப்படுவதாகவும் ப்ரஹ்மகாண்டத்தில் = உபநிஷத்துக்களில் எல்லாவிடங்களிலும் பகவான் ஸாக்ஷாத்தாகவே பேசப்படுவதாகவும் கூறப்படுவதனால் உத்தரபாகமாகிய ச்ருதிசிரஸ்ஸு பூர்வபாகத்தைக் காட்டிலும் பிரதானமாயிற்று. இது தன்னை எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யமங்களச்லோகத்தில் 'ச்ருதிசிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே' என்றதனால் வெளியிட்டருளினார். 'ச்ருதௌதீப்தே' ச்ருதி சிரஸி விதீப்தே' என்று அதனைப் பிரித்துக் கூறுவர் பெரியோர். ச்ருதியில் = பூர்வபாகத்தில் அந்தர்யாமியாக மறைந்திருப்பதனால் சிறிதே விளங்குகிறதாகவும், அதன் சிரஸ்ஸில் = உத்தரபாகத்தில் அதிகமாக - வெளிப்படையாக விளங்குகிறதாகவும் உள்ளது ஸ்ரீநிவாஸனாகிய ப்ரஹ்மமென்பது அதன் கருத்து. அமுதனாரும் (ஓதியவேதத்தின் உட்பொருளாய் அதனுச்சி மிக்க சோதியை' (இராமா-85) என்று அருளிச்செய்தார். அத்தகைய சிறந்த மறைமுடியில் எம்பெருமான் ஸ்பஷ்டமாக அறியப்படுவது கொண்டு - ச்ருதிசிரஸ்ஸில் தேவரீர் திருவடிகளை வைத்தருளிற்று என்கிறார். ஆளவந்தார் (யத் மூர்த்நி மே ச்ருதிசிரஸ்ஸு ச பாதி - பாதாரவிந்தம் அரவிந்தவிலோசநஸ்ய (ஸ்தோத்ரரத்னம்6) என்று அருளியதை அடியொற்றி இவரும் 'மந்மூர்த்நி' என்றும் 'ச்ருதீநாம் சிரஸி' என்றும் அருளியது காண்க. முற்கூறிய திருமலையைவிட அதனை உயர்ந்ததாகப் புகழ்ந்துபேசிய 'அராயிகாணே விகடே கிரிம் கச்ச ஸதாந்வே, சிரிம்பிடஸ்ய ஸத்த்வபி: தேபிஷ்ட்வா சாதயாமஸி' (ருக்வேதம் எட்டாம் அஷ்டகம் எட்டாம் அத்யாயம் பதின்மூன்றாம் வர்க்கம் முதல் ருக்கு) முதலிய ச்ருதிகள் உயர்ந்தனவென்பது ஆசிரியரின் கருத்து. ப்ரமாணத்தினாலன்றோ ப்ரமேயமான திருமலையின் பெருமை அறியப்படுகிறது. 'ஓ ஸம்ஸாரியான ஜீவனே, நீ செல்வமில்லாதவனாகவும் குருடனாகவும் பல வகைப்பட்ட (மூன்று) தாபங்களுடையவனாகவும் பகைவரைக் கொண்டவனாகவும் இருந்தாயாகில் (அக்குறைகள் தீருவதற்காக) ஸ்ரீனிவாஸனுடைய திருமலைக்கு அவனுடைய பக்தர்களோடு கூடிச் செல்வாயாக, சென்று அவர்கள் மூலமாகவே உன் விருப்பத்தை அவ்வெம்பெருமானிடம் யாசித்துப் பெறுவாயாக, அல்லது அவர்கள் மூலமாகவே உன்னை அப்பெருமானுக்கு ஸமர்ப்பிப்பாயாக' என்று முற்கூறிய ருக்குக்கு எம்பெருமானார் அருளிச்செய்த பொருளை ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலை முதல் ஸ்தபகத்தின் இறுதியில் காண்க.

அநந்யமநஸாம் சித்தே - அந்யஸ்மிந் மந: யேஷாம்தே - அந்

யமநஸ: அந்யமநஸ: நபவந்தி இதி அநந்யமநஸ:. வேறொரு தாழ்ந்த பொருளில் தங்களு டைய மனஸ்ஸைச் செலுத் தாமல் எம்பெருமானிடத்தி லேயே மனஸ்ஸைப் பறிகொ டுத்த பெரியோர்களென்றபடி. அவர்களாகிறூர் - 'முழுவேழுலகு முண்டான் உகந்து வந்தடியே னுள் புகுந்தான் அகல்வானுமல் லனினி' (திருவாய் 2-6-7) என்கி றபடியே எம்பெருமான் தம் திரு வுள்ளத்திலே புகுந்திருக்க, அவ னையே உண்ணும் சோறு பரு கும் நீர் தின்னும் வெற்றிலையு மாகிய தாரக போஷக போக் யங்களாகவும், சேலேய் கண்ணி யரும் பெருஞ்செல்வமும் நன்மக் களும் மேலாத் தாய் தந்தை யுமாகவும் மற்றும் புருஷார்த் தமும் அதற்கு உபாயமுமாக வும் அனுஸந்தித்த நம்மாழ் வார் தொடக்கமான ஆழ்வார் களும், 'அவைதம்மொடும் வந்தி ருப்பிடம் மாயனிராமாநுசன் மனத்து' (இராமா 106) என்றும் 'நித்யமச்யுத பதாம்புஜயுக்மருக்ம வ்யாமோஹத: ததிதராணி த்ரு ணய மேநே (ஸ்ரீவைகுண்ட ஸ்த வம்-1) என்றும் சொல்லுகிற படியே வைகுந்தம் திருவேங்க டம் திருமாலிருஞ்சோலை முத லிய திருப்பதிகளில் எழுந்தரு ளியிருக்கும் இருப்போடு கூடி எம்பெருமான் தம் திருவுள் ளத்தை விரும்பி இருப்பிடமா கக் கொண்டு நிற்க, பொன் போலே விரும்பத்தக்க அவ னது திருவடியிணையையே விரும்பிச் சிந்தித்துப் புறம்புண் டான பொருள்களைப் புல்லைப் போல் புல்லிதாக நினைத்துப் புறக்கணித்திருக்கும் எம்பெருமா னாரும், ஸ்ரீமத்ஸுந்தரஜாமாத்ரு முநி மாநஸவாஸிநே, ஸர் வலோக நிவாஸாய ஸ்ரீநிவா ஸாய மங்களம்' (மங்களாசாஸ நம் 13) என்று தாமே அருளிச் செய்தபடியே ஸர்வலோகத்தி லும் அந்தராத்மாவாய் இருந்த வெம்மை தீர எம்பெருமான் தம் முடைய மனஸ்ஸில் குளிர்ந்து நித்யவாஸம் செய்ய, அவன் திருவடிகளைத் தாம் தஞ்ச மாக த்யானிப்பதோடல்லாமல் 'ஸௌம்யோபயந்த்ருமுநிநா மம தர்சிதௌ சரணௌ' (ப்ரபத்தி-15) என்று இதுதன்னிலேயே தாம் அருளிச்செய்கிறபடியே தமக்குத் தஞ்சமாகவும் காட் டித்தந்தருளிய மணவாளமாமு னிகளும் போன்ற மஹான் கள். அவர்கள் திருவுள்ளத்தில் தேவரீர் திருவடிகளை வைத்த ருளிற்று என்கிறூர். நித்ய நிர்த்தோஷமான வேதத்துக்கும் ப்ராமாண்யம் (மக்களால் நம் பிப் பின்பற்றத்தக்க உண் மையான ஞானத்தை உண்டு பண்ணும் பெருமை) சிஷ்டர்கள் பரிக்ரஹித்தது கொண்டு அறி யப்படுவதனால், வேதத்தைவிட ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் போன்ற சிஷ்யர்கள் உயர்ந்தவர் களென்று ஆசிரியர் திருவுள்ளம்.

கடைசியில், 'இங்ஙனம் கூறிய பொருள்களில் மேலெல்லையாக உயர்ந்த மகான்களின் திருவுள் ளங்களொடொக்க, மிகத்தாழ்ந்த அடியேனுடைய தலையையும் நினைத்து நிர்ஹேதுமாகத் திருவடிகளைத் தேவரீர் வைத் தருளிற்றே, இதென்ன ஸௌல் சீல்ய காஷ்டையோ' என்று மனமுருகப்பெற்று, திருவேங்கட முடையானே அடியேன் தலை யில் திருவடிகளை வைத்தத னால் ஞானோதயமாகி அத்தி ருவடிகளையே தஞ்சமாகப் பற் றுகிறேன்' என்கிறூர் இதனால்.

அம்லாநஹ்ருஷ்யதவநீதல
கீர்ணபுஷ்பௌ
ஸ்ரீவேங்கடாத்ரி சிகராபரணயமா-
நௌ ।
ஆனந்திதாகில மநோநயநௌ
தவைதௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்
ப்ரபத்யே ।। (13)

(ப) ஸ்ரீவேங்கடேச = திரு வேங்கடமுடையானே, அம் லாந ஹ்ருஷ்யத் = வாட் டமின்றி மலர்ந்துகொண்டி ருக்கிற, அவநீ தலகீர்ண புஷ்பௌ = (அருகே) பூமியில் இறைந்த புஷ்பங்களை உடை யனவும், ஸ்ரீவேங்கடாத்ரி சிகர ஆபரணயமாநௌ= திருவேங்க டமலையின் சிகரத்திற்கு ஆபர ணம் போன்றுள்ளனவும், ஆநந் தித அகில மந: நயநௌ= மகிழ்விக்கப்பட்ட மக்களனைவ ரின் மனத்தையும் கண்களையும் உடையனவுமாகிய, ஏதௌ த்வ சரணௌ= இந்த உன் திருவ டிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க.) பக்தர்கள் உன் திருவ டிகளில் அர்ச்சித்த புஷ்பங்கள் அங்கு இடம் பற்றுமல் பக்கத் திலே இறைந்து சிறிதும் வாட் டமில்லாமல் மலர்ந்துகொண் டேயிருக்க, அதை ஸேவித் தவர்கள், இவையென்ன திரு வேங்கடமலைச் சிகரத்திற்கு அணியப்பட்ட ஆபரணமோ' என்று நினைக்குமாறு அவர் களின் மனத்தையும் கண்க ளையும் கவர்ந்து களிக்கும்படி செய்த உன் திருவடிகளைச் சர ணம் அடைகிறேன்.

(வி) அன்பர்கள் எம்பெருமான டியிணையில் அர்ச்சித்த புஷ்பங் கள் பக்கத்தில் கீழே இறைந்து கிடக்கின்றனவாம். அவை வாடாமல் மலர்ந்தேயிருக்கின்ற னவாம். இங்ஙனம் அர்ச் சித்த அன்பர்கள் நித்ய ஸூரிக ளேயாவர், 'வானவர் வானவர் கோனொடும் சிந்து பூ மகிழும் திருவேங்கடம்' (திருவாய் 3-3-2)

என்ற பாசுரப்பகுதியும், 'நித்ய ஸூரிகள் ஸ்ரீஸேனாபதியாழ் வானோடுங்கூட ஆராதனார்த்த மாகத் தூவின புஷ்பங்கள் நில மிதியாலே (= இடத்தின் ஸாரமான தன்மையாலே) செவ்விபெறும்படியான (= வாடாமல் மலர்ந்தேயிருக்கும்படியான) திருமலை' என்ற இருபத்து நாலாயிரப்படி ஸ்ரீஸூக்திகளும் கொண்டு இது அறிய வெளிதாம். புஷ்பங்கள் மலர்ந்தேயிருப்பது புஷ்பமண்டமான திருவேங்கடத்திலன்றோ? இத்திருவடிகள் தாம் நாரணன் தன் வாடாத மலரடியாகையால் தம்மிடம் சேர்ந்த புஷ்பங்களையும் - தம்மையேயொக்க அருள்செய்து வாடாத மலர்களாகவே ஆக்கின என்றும் கூறலாம். இத்தகைய பெருமைபெற்ற திருவடிகள் திருமலையுச்சிக்கு அணியான ஓர் உச்சிப்பூப்போலேயிருந்து ஸேவிப்பவர்களின் கண்ணுக்கும் கருத்துக்கும் இன்பமூட்டுகின்றன வென்க.

ப்ராய: ப்ரபந்நஜநதா ப்ரதமாவ
காஹ்யௌ
மாது: ஸ்தநாவிவ சிசோ
ரம்ருதாயமாநௌ ।
ப்ராப்தௌ பரஸ்பரதுலாம்
அதுலாந்தரௌ தே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்
ப்ரபத்யே ।। (14)

(ப.) ஸ்ரீவேங்கடேச= திருவேங்கடமுடையானே, ப்ராய:= பெரும்பாலும்,
ப்ரபந்ந ஜநதா= சரணம் புகுகின்ற மக்களுக்கு, ப்ரதம அவகாஹ்யௌ = முதலில் அறியப்படுவனவும், சிசோ:= குழந்தைக்கு, மாது: ஸ்தநாவிவ = தாயின் முலைகள்போல், அம்ருதாயமாநௌ= அம்ருதம்போலுள்ளனவும், பரஸ்பரதுலாம் = ஒன்றுக்கொன்று ஒப்புமையை, ப்ராப்தௌ = அடைந்தனவும், அதுலாந்தரௌ = வேறொன்றோடு ஒப்புமையில்லாதனவுமாகிய, தே சரணௌ = உன் திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருவேங்கடவா, சரணம் புகுதலாவது உன் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுதலேயாகையால், சரணம் புகும்மனிதர்க்கு, குழந்தைக்கு முதன்முதலில் அறிய வேண்டிய தாயின் முலைகள் போல் அம்ருதமயமானவைகளும், வேறோர் உபமானமின்றித் தமக்குள் ஒப்புமை உடையவைகளுமாகிய உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன்.

(வி) எம்பெருமானை ப்ரபத்தி செய்து அடையும் அடியவன் முதலில் அவன் திருவடிகளை அறிந்து பற்றவேணும். (முமுக்ஷு146) பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகளை விடாது, திண்கழலாயிருக்கும்' என்று பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்தபடியே நம்மை விடாது காக்கும் திருவடிகளையே பற்றவேணுமென்றபடி தாயின் முலைகளை - பால்கொடுத்துத் தன் ஜீவனத்திற்குக் காரணமான முலைகளை முதன் முதலாக அறிந்து குழந்தைகள் பற்றும்படியை இதற்கு த்ருஷ்டாந்தமாகக் கூறுகிறார் இதன் முன்னடிகளில். அவற்றுக்குச் சேர 'சேஷிபக்கல் சேஷபூதன் இழியும் துறை; ப்ரஜை முலையிலே வாய் வைக்குமா போலே' (முமுக்ஷு 147) என்ற லோகாசார்ய ஸ்ரீஸூக்தியும், 'சேஷிபக்கல் ஆச்ரயிக்க இழியும் சேஷபூதன் தன் (சேஷத்வ) ஸ்வரூபாநுகுணமாக இழியும் துறை திருவடிகள்; ஸ்தனந்தய ப்ரஜை (= பாலுண்ணும் சிறுகுழந்தை) தாயினுடைய அவயவமெல்லாம் கிடக்கத் தனக்கு வகுத்ததாயுள்ள முலையிலே வாய் வைக்குமாபோலே என்கை' என்ற அதன் மாமுனிகள் வ்யாக்யானமும் அனுஸந்திக்கத்தகும்.

இனிப் பின்னடிகளைக் காண்போம். ப்ராப்தௌ பரஸ்பரதுலாம் அதுலாந்தரௌ - சரணௌ - தமக்குப் புறம்பு ஓர் உபமானமின்றித் தம்மிலேயே ஒன்று மற்றொன்றை உபமானமாகவுடைய திருவடிகள் என்றபடி. இணைத்தாமரையடியிறே திருவேங்கடமுடையான் திருவடிகள். ஒன்றுக்கொன்று உபமானமாயிருத்தலென்றது - சரணௌ என்ற த்விசனத்தின் பொருளாகும். அதனைத் தனியாக இரண்டு விசேஷணங்களிட்டு விவரித்தருளுகிறார் இவ்வாசிரியர் என்று கொள்க. இதற்குப் பொருந்த 'சரணௌ - திருவடிகளை; இத்தால் சேர்த்தியழகை... சொல்லுகிறது, முமுக்ஷு 144, 145 என்ற பிள்ளை லோகாசார்யர் சூர்ணிகைகளும் 'இந்த த்விவசனத்தால் சொல்லுகிற அர்த்தத்தை அருளிச்செய்கிறார் - இத்தால் என்று தொடங்கி அதாவது சரணௌ என்று இரண்டு திருவடிகளையும் சொல்லுகிற இத்தால் 'இணைத்தாமரையடி' (பெரியதிரு 1-8-3) என்கிறபடியே இரண்டு தாமரைப் பூவை நிரைத்து (= வரிசையாக) வைத்தாற்போலேயிருக்கிற சேர்த்தியழகைச் சொல்லுகிறதென்கை" என்ற மாமுனிகளின் வ்யாக்யானமும், 'இணைத்தாமரை என்று பரஸ்பரதுல்யங்களாய் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற தாமரையென்றபடி' என்று அங்குள்ள சுத்தஸத்வம் தொட்டையாசார்ய ஸ்வாமி அரும்பதமும் ஸேவிக்கத்தகும்.

ஸத்த்வோத்தரைஸ் ஸததஸேவ்ய
பதாம்புஜேந
ஸம்ஸாரதாரக தயார்த்ர
த்ருகஞ்சலேந ।
ஸௌம்யோபயந்த்ரு முநிநா மம
தர்சிதௌ தே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்
ப்ரபத்யே ।। (15)

(ப) ஸ்ரீவேங்கடேச = திரு வேங்கடவனே, ஸத்த்வ உத்தரை:= ஸத்வ குணத்தினால் நிறைந்த பெரியோர்களால், ஸதத ஸேவ்ய பத அம்பு ஜேந = எப்போதும் வணங்கத் தக்க திருவடித்தாமரைகளையுடையவரும், ஸம்ஸார தாரக = பிறவியைத் தாண்டச் செய்கிற, தயா ஆர்த்ர த்ருக் அஞ்சலேந = தயையினால் நனைந்த கடைக்கண்களையுடையவருமாகிய, ஸௌம்ய உபயந்த்ரு முநிநா = அழகிய மணவாள மாமுனிகளால், மம தர்சிதௌ = எனக்குக் காட்டிக் கொடுக்கப்பெற்ற, தே சரணௌ = உன் திருவடிகளை, சரணம் ப்ரபத்யே= தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க.) திருவேங்கடவா, ஸத்துவகுணம் நிறைந்த மிகப் பெரியோர்கள் இடைவிடாமல் தம் திருவடிகளைத் தியானம் செய்ய, அவர்களைக் கருணை பொங்கிய கடைக்கண்களால் குளிரநோக்கிப் பிறவிக்கடலைக் கடத்தும் பெருமைமிக்க மணவாளமாமுனிகளால், "இவை மிக வுயர்ந்தவை, சரணம் புகுந்தவர்களை மோக்ஷமடைவிக்கவல்லவை" என்று எனக்குக் காட்டிக்கொடுக்கப்பெற்ற உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன்.

(வி) மணவாளமாமுனிகளின் திருவடித் தாமரைகளை ஸதா ஸேவிக்கும் அவர் சிஷ்யர்கள், அறியாமை சோம்பல் தூக்கமா



கியவற்றை விளைக்கும் தமோகுணமாவது, ஐயம் திரிபு விருப்பு வெறுப்பு ஆகியவைகளை உண்டாக்கும் ரஜோகுணமாவது சிறிதும் கலசாமல், தெளிந்த அறிவு நல்ல ஆசாரம் முதலிய நன்மைகளுக்குக் காரணமான சுத்த ஸத்துவகுணமே நிறையப் பெற்றவர்கள். அவர்கள் எங்ஙனமிருப்பர்களென்பதை, 'அபகதமதமாநை: அந்திமோபாய நிஷ்டை: அதிகத பரமார்த்தை; அர்த்த காமாநபேக்ஷை:, நிகில ஜநஸுஹ்ருத்பி: நிர்ஜிதக்ரோத லோபை: வரவர முனிப்ருத்யை: அஸ்துமே நித்யக:' (உத்தரதின சர்யா-11) என்று இவர் தம்மைப் போன்று மாமுனிகளின் சிஷ்யரான . எறும்பியப்பா அருளிய ச்லோகத்தினால் அறியலாகும். செருக்கும், தான் சுதந்திரனென்னும் அபிமானமும் இல்லாதவர்களாகவும், கருமம் ஜ்ஞாநம் பக்தி ப்ரபத்தி ஆசார்யாபிமானம் என்று கூறப்பட்ட ஐவகை மோக்ஷோபாயங்களில் சரமமான ஆசார்யாபிமானமென்னும் உபாயத்தில் ஊன்றியவர்களாகவும், புருஷார்த்தத்தின் எல்லையான ஆசார்ய கைங்கர்யத்தையடைந்தவர்களாகவும், செல்வத்திலும் அதைக்கொண்டு அனுபவிக்கும் சிற்றின்பத்திலும் அபேக்ஷையற்றவர்களாகவும், தோழர் பகைவரென்னும் வாசி பாராமல் எல்லாரிடத்திலும் நன்மையை எண்ணும் நன்மனம் படைத்தவர்களாகவும், கோபம் உலோபித்தனம் இவற்றை வென்றவர்களாகவும் விளங்குகிற - மாமுனிகளின் சிஷ்யர்களுடன் சேர்க்கையானது அடியேனுக்கு நித்யமாக உண்டாக வேணுமென்று ப்ரார்த்திப்பது இதன் பொருள்.

ஸம்ஸாரதாரகேத்யாதி - இவ்வண்ணுதாமே அருளிய மணவாளமாமுனிகளின் வாழித் திரு நாமத்தில் உள்ள 'கருணை பொங்கிய கண்ணிணை வாழியே' என்பதன் விவரணமாகும். இவ்வடி மாமுநிகளின் திருக்கண்ணிணையில் பொங்கும் கருணை எப்படிப் பட்டதென்ன, பிறப்பிறப்புத் தொடர்ச்சியாகிய ஸம்ஸாரத்திலிருந்து தாண்டுவித்துப் பரம பதத்தை அளிக்கவல்லது அவரது தயை என்னும் அதன் விடை இவ்விரண்டாமடியினால் பெறப்படுவது காண்க.

ஸௌம்ய உபயந்தா என்பது- ஸ்ரீரங்கநாதனது அழகிய மணவாளன் என்னும் திருநாமத்தின் மொழிபெயர்ப்பு. இத்திருநாமமானது மணவாளமாமுநிகளுக்கு அவர் தம் திருத்தமப்பனாரால் நாமகரண காலத்தில் இடப்பெற்றதாகவும், பின்பு ஸந்நியாஸாச்

ரமம் ஸ்வீகரித்துப் பெரியபெருமாளை மங்களாசாஸனம் செய்து இவர் கைகூப்பிநிற்க 'நீர் நம்முடைய நாமமான (அழகிய மணவாளனென்ற) முன் திருநாமத்தையே முற்ற நடத்தும்' (யதீந்த்ரப்ரவணப்ரபாவம்) என்று பெரிய பெருமாள் அருளிச்செய்ததாகவும் காண்பதனால் இவர் ஸௌம்யோபயந்த்ருமுநி எனப்பட்டாரென்க. இத்தகைய மாமுனிகள் புகலொன்றில்லாத தமக்குப் பக்கத்திலிருந்து கொண்டு திருவேங்கடமுடையான் திருவடிகளைத் தஞ்சமாகக் காட்டி ஸுப்ரபாதாதி ஸமதோத்ரங்களையும் தத்விஷயமாக இயற்றும்படி நியமித்ததனால் - 'ஸௌம்யோபயந்த்ருமுநிநா மம தர்சிதௌ ஸ்ரீவேங்கடேச சரணௌ' என்கிறார். ஆக ஆசார்யருசி பரிக்ருஹீதமாய் அவர் காட்டிய திருவடிகளை இதனால் சரணம் புகுந்தாராயிற்று.

ச்ரீச ச்ரியா கடகயா திவதுபாய
பாவே
ப்ராப்யே த்வயி ஸ்வயமுபேய
தயா ஸ்புரந்த்யா ।
நித்யாச்ரிதாய நிரவத்ய குணாய
துப்யம் ஸ்யாம் கிங்கரோ
வருஷகிரீச ந ஜாது மஹ்யம் ।। (16)

(ப.) ஸ்ரீ ஈச வ்ருஷகிரி ஈச= திருவின் மணவாளனாகிய விருஷாத்ரிநாயகனே, தவத் உபாயபாவே = உனது உபாயநிலையில், கடிகயா = (எங்களை உன்னுடன்) சேர்த்து வைப்பவளாயும். த்வயி ப்ராப்யே ஸதி = நீ (எங்களால்) அடையப்படுமவனாகும் நிலையில், ஸ்வயம்= தானும், உபேயதயா ஸ்புரந்த்யா = (எங்களால்) அடையப்படும் நிலையோடு விளங்குமவளாயும் இருக்கிற, ச்ரியா = லக்ஷ்மீதேவியினால், நித்ய ஆச்ரிதாய = எப்போதும் (திருமார்பில்) அடையப்பெற்றவனாய, நிரவத்ய குணாய = குற்றமில்லாத நற்குணங்களை உடையவனுமாகிய, துப்யம் = உனக்கு, கிங்கர: ஸ்யாம் = (நான) தொண்டு செய்பவனாக ஆகக்கடவேன், மஹ்யம் கிங்கர: = எனக்குத் தொண்டனாக (சுதந்திரனாக) ஜாது = ஒருபோதும், ந ஸ்யாம் = ஆகக்கடவேனல்லேன்.

(க.) திருமகள் நாதனாகிய திருமலைநாயகா, நாங்கள் உன்னைச் சரணம் புக நீ எங்கட்குப் பயன் தரும்போது, எங்களிடம் நீ குற்றங்கண்டு சீறுமல் உன்னைப் பொறுப்பித்துப் பயனைப் பெறுவிப்பவளாயும், பின்பு பயனைப்பெற்று நாங்கள் செய்யுங்குற்றேவல்களைக் கொள்ளுமவளாயும் இருக்கிற அலர்மேல்மங்கை இறையும் அகலகில்லேனென்று உறையும் திருமார்பை உடைய உனக்கே நான ஆட்செய்வேன். ஒருகாலும் ஹிரணயன்போல சுதந்திரனாக இரேன். இங்ஙனம் நீ அருள்செய்யவேணும்.

(வி) இங்ஙனம் - முதல் ச்லோகத்தில் பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றி, இரண்டாவது தொடங்கிப் பதினாலாவதீறாகத் திருவேங்கடமுடையான்திருவடிகளைப் பலபடியாக வருணித்து, பதினைந்தாம் ச்லோகத்தினால் அத்திருவடிகளை மணவாளமாமுனிகள் காட்டித் தந்ததாகக் கூறி, அவற்றையே தமக்கு இஷ்ட ப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாகப் பற்றுவதாக வெளியிட்டு த்வய பூர்வகண்டத்தின் பொருளை விவரித்து, இந்தக் கடைசி

## கோயில் பிரசாதங்கள்

இறைவனுக்கு நிவேதனம் செய்யப்பட்ட பிரசாதத்தை விடச் சிறந்தது உலகில் வேறு ஒன்றுமில்லை. அப்படிப்பட்ட பிரசாதத்தை நாம் பெறுவதற்கு மிகுந்த புண்ணியத்தையும், இறையருளையும் பெற்றிருக்க வேண்டும். ஒவ்வொரு கோவிலும் ஒவ்வொரு பிரசாதத்திற்குச் சிறந்தது. அதனால் கோவிலுக்குச் செல்பவர்கள் தவறுமல் பிரசாதத்தை வாங்கி உண்ணுங்கள். ஒவ்வொரு கோவிலில் ஒவ்வொரு பிரசாதம் கிடைக்கும். அதைக் கீழே காணலாம்.

| கோவில்கள் | பிரசாதம் |
|---|---|
| சுசீந்திரம் | வங்கார தோசை |
| சுசீந்திரம் | வடைமாலை |
| திருப்பதி | லட்டு |
| காஞ்சீபுரம் | இட்லி |
| திருவரங்கம் | திருப்பாவாடை |
| குருவாயூர் | திருமதுரம் |
| திருவல்லிக்கேணி | திருக்கண்ணமுது |
| திருச்செந்தூர் | புட்டு |
| பிள்ளையார்பட்டி | மோதகம் |
| சிதம்பரம் | கற்கண்டுப் பொங்கல் |
| பழனி | பஞ்சாமிர்தம் |

தொகுத்தவர் : அம்புஜம் முராரி - சேலம்.

யான ச்லோகத்தினால், ப்ரபத்தியின் பலனாகக் கைங்கர்யத்தைத் திருவேங்கடமுடையானிடத்தில் ப்ரார்த்திப்பதன் மூலம் த்வயத்தின் உத்தரகாண்டார்த்தத்தை அருளிச்செய்து இந்த ப்ரபத்தி க்ரந்தத்தைத் தலைக் கட்டுகிறார்.

உத்தர கண்டார்த்த விவரணமாயமைந்த இந்த ச்லோகத்தில் த்வதுபாயபாவே கடிகயா ஸ்புரந்த்யா ச்ரியா நித்யாச்ரிதாய நிரவத்ய குணாய' (= அடியேனால்பற்றப்பட்டு) தேவரீர் உபாயமாம் போது புருஷகாரமாக விளங்குகின்ற பிராட்டியினால் நித்யமாக ஸம்ச்லேஷிக்கப்பட்டு அவளால் தலையெடுத்த குற்றமற்ற கல்யாண குணங்களையுடைய) என்று 'ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே என்ற பூர்வகண்டார்த்தத்தை அனுவதித்தது - இதுவரையில் அனுஷ்டித்த ப்ரபத்தி ஐச்வர்யாதி பலன்களுக்காகவன்று, பகவத்கைங்கர்யத்திற்காகவே என்பதை அறிவித்தற்காக வென்க. 'த்வதுபாய பாவே கடிகயா ஸ்ப்புரந்த்யா, த்வயி ப்ராப்யே ஸதி ஸ்வயம் உபேயதயா ச ஸ்ப்புரந்த்யா ச்ரியா' (= தேவரீர் உபாயமாம் போது புருஷகாரமாக விளங்குமவளும் தேவரீர் ப்ராப்யராம்போது (= அடியேன் செய்யும் கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும்போது) தானும் தேவரீரைப் போலவே ப்ராப்யையாக விளங்குமவளுமான ஸ்ரீதேவியினால்) என்பதனால் பிராட்டிக்குப் பூர்வகண்டத்தில் உபாயத்வமும் உத்தரகண்டத்தில் ப்ராப்யத்வமுமாகிற ஆகாரபேதமும், ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டமை காண்க.

இனி 'ப்ராப்யே த்வயி ஸ்வயம் (அபி) உபேயதயா ஸ்ப்புரந்த்யா நித்யாச்ரிதாய நிரவத்யகுணாய துப்யம் கிங்கர: ஸ்யாம்' (=தேவரீர் ப்ராப்யராம்போது தானும் ப்ராப்யையாக விளங்கும் பிராட்டியாலே நித்யமாக ஸம்ச்லேஷிக்கப்பெற்றும், அடியேனுக்குப் போக்யங்களான குற்றமற்ற திருக்கல்யாந குணங்களோடு கூடியும் இருக்கின்ற (நாராயணனான) தேவரீர்க்கு அடியேன் கிங்கரனாக ஆகக்கடவேன்) என்பது உத்தரகண்டத்திலுள்ள ஸ்ரீமதே நாராயணாய' என்பதன் விவரணமாகும். 'நஜாது மஹ்யம் (ஸ்யாம்) என்பது அங்குள்ள நம: பதத்தின் விவரணம். 'எனக்குத் தொண்டனாக (ஸ்வதந்த்ரனாக) ஒருபோதும் ஆகக்கடவேனல்லேன்' என்று பதவுரையில் கூறியது சாதாரணமான பொருள். 'துப்யம் கிங்கர: ஸ்யாம், ஜாது மஹ்யம் கிங்கர: ந ஸ்யாம்' தேவரீருடைய உகப்புக்காகவே தேவரீருக்குத் தொண்டு புரிபவனாக ஆவேன், அடியேனுடைய உகப்புக்காகத் தேவரீருக்குத் தொண்டனாக ஆக மாட்டேன்) என்பது ரஹஸ்யக்ரந்தங்களில் ஆசார்யர்கள் அருளிய உண்மையான நம: பதார்த்தமாகும். 'நம: - கைங்கர்யத்தில் களையறுக்கிறது. களையாவது தனக்கென்னப் (தனது உகப்புக்காக) பண்ணுமது' (முமுக்ஷு 178, 179) என்ற லோகார்ய ஸ்ரீஸூக்தி இங்கு அநுஸந்திக்கத்தகும்.

ஆக இதனால் முன் செய்த ஸித்தோபாய வரணமென்னும் சரணாகதிக்குப் பயனாகக் திருவேங்கடமுடையானுடைய கைங்கர்யததை ப்ரார்த்தித்துத் தலைக்கட்டினாராயிற்று.

ஸ்ரீவேங்கடேச ப்ரபத்தி முற்றிற்று.

## அறிவிப்பு

**திருமலை திருப்பதி தேவஸ்தானம் அந்தந்த மாநில இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறையின்கீழ் பதிவு செய்யப்பெற்றக் கோயில்கள் பயனுறும் வகையில் கீழ்வரும் சலுகைகள் வழங்கியுள்ளது.**



கோயில்களுக்குத் தேவையான கோயில்குடைகளை தி.தி.தேவஸ்தானம் 50% தள்ளுபடி விலையில் வழங்கி வருகிறது. இதற்கு அந்தந்த கோயிலுக்குரிய செயலாட்சித் தலைவரின் விண்ணப்பக் கடிதத்துடன் இரண்டு குடைகளுக்காக ரூ.1050/- அனுப்புதல் வேண்டும்.



கோயில்களுக்கான ஒலிப் பெருக்கிக் கருவிகளை 50% தள்ளுபடி விலையில் தி.தி. தேவஸ்தானம் வழங்கிவருகின்றது. இதற்கு அந்தந்த கோயிலுக்குரிய செயலாட்சித் தலைவரின் விண்ணப்பக் கடிதத்துடன் ரூ. 3370/- அனுப்புதல் வேண்டும்.

முழுவிபரங்களுக்குச் 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

# சீலத்தின் சிறப்பு

திரு. க. ஆ. சோணசைலம் - திருவத்திபுரம்.

நற்குணத்தால் வருவது சீலம். சீலம் என்பது பண்பின் சிகரம் - ஒழுக்கத்தின் உயிர். இறைவனை 'சீலமே' என்று அழைக்கின்றனர் திருஞானசம்பந்தரும் அப்பரும்.

ஞாலமேவிசும் பேநலந் தீமையே
கால மேகருத் தேகருத் தாற்றெழும்
சீல மேதிரு வீழி மிழலையுள்
கோல மேஅடி யேனைக் குறிக்கோளே.

-திருநாவுக்கரசர்(அப்பரடிகள்)

திருக்குறளில் அறத்துப்பாலில் ஒழுக்கம் உடைமை என்ற அதிகாரத்தில் ஒழுக்கத்தின் உயர்வினையும், ஒழுக்கத்தினால் மேன்மையுண்டாகும் என்பதனையும் தெளிவாக கூறப்பட்டுள்ளது.

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்"

-(திருக்குறள் 131)

ஒழுக்கம் மிகப்பெரிய சிறப்பினைத் தரக்கூடியது. அதனால் அதனை உயிரைவிடச் சிறந்ததாகக் கொண்டு வாழவேண்டும்.

"ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை
இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி"

-(திருக்குறள் 137)

ஒழுக்கப்படி நடந்தால், பல சிறப்புகளை அடைவர்; நடக்காவிட்டால், தீராத பழியை அடைவர்.

இந்திரன் சீலத்தைப்பெற விரும்பினான் - பிரம்மதேவரிடம் சென்று சீலத்தையருள வேண்டும் என்று கேட்டான். பிரம்மதேவர் "இந்திரனே! சீலம் மிகவும் உயர்ந்தது - அது பிரகலாதரிடம் தங்கியிருக்கின்றது - அவரிடம் சென்று பெறக்கடவாய்" என்றார்.

இந்திரன் பிரகலாதரிடம் வந்து பலகாலம் பணிவிடைகள் புரிந்தார். அவரின் பணிவிடையால மனம் மகிழ்ந்த பிரகலாதர "இந்திரனே! உனக்கு என்ன வேண்டும் கேள் தருகிறேன்" என்றார். இந்திரன் அவரைப்பணிந்து "ஞானசீலரே! தங்களிடம் சீலம் என்ற ஒன்றை யாசிக்கிறேன்" என்றார்.

பிரகலாதர் உடனே "நல்லது; சீலத்தைத் தந்தேன்" என்றார. பிரகலாதரிடம் இருந்து ஒரு ஒளியுருவம் புறப்பட்டு வந்து இந்திரன் மேனியில அடங்கியது - அந்த ஒளியுருவத்தை பிரகலாதர் பார்த்து "நீ யார்?" என்று கேட்டார். "நான் சீலம்" என்று அவ்வொளியுருவம் கூறியது.

பின்னர் பிரகலாதர் உடம்பிலிருந்து மற்றொரு உருவம் புறப்பட்டது. பிரகலாதர் 'நீ யார?' என்றார். "நான் தருமத்தின் அதிதேவதை: சீலமில்லாத இடத்தில் இருக்கமாட்டேன்" என்று கூறி, அவ்வொளியுருவம் இந்திரன் பால் சென்று மறைந்தது.

அடுத்து ஒரு ஒளியுருவம் பிரகலாதர் மேனியிலிருந்து புறப்பட்டது. "நீ யார்?" என்று பிரகலாதர் வினவினார். "நான் சத்தியம்; தருமம் இல்லாத இடத்தில் என்னால் இருக்கமுடியாது" என்று கூறி இந்திரன் மேனியில் அடங்கியது.

அதற்குப்பின் பிரகலாதரிடமிருந்து மற்றோர் ஒளியுருவம் புறப்பட்டது - "நீ யார?" என்று அவர் கேட்டார. "நான ஒழுக்கம்; சத்தியத்தை விட்டுநான பிரிந்திருக்க மாட்டேன்" என்று கூறி இந்திரன் உடலில் மறைந்தது.

அடுத்து ஒரு ஒளியுருவம் புறப்பட்டது. கண் கூசும்படியான அதனைப் பார்த்து பிரகலாதர "நீ யார?" என்றார். "நான் பலம், ஒழுக்கமில்லாத இடத்தில பலமாகிய நான் இருக்கமாட்டேன்" என்றது. அதுவும் இந்திரன் உடலில் சேர்ந்து மறைந்தது.

பின்னர் ஒரு அழகிய பெண் உருவம் ஒளிமயமாகப் புறப்பட்டது. "அம்மா! தாங்கள யார்? என்று கேட்டார் பிரகலாதர். "நான் மகாலட்சுமி; பலமில்லாத இடத்தில் நான் இருப்பதில்லை" எனக்கூறி இந்திரன் உடலில் மறைந்தது.

இந்த உண்மைவிளக்க கதையிலிருந்து நாம் தெறிந்து கொள்வது:

இலக்குமி இருக்கும் இடத்தில் வலிமையும், வலிமையுள்ள இடத்தில் ஒழுக்கமும், ஒழுக்கமுள்ள இடத்தில் சத்தியமும், சத்தியமுள்ள இடத்தில் தருமமும், தருமமுள்ள இடத்தில் சீலமும் இருக்கும் எனத்தெளிவாகத் தெறிகிறது. இத்தனைக்கும் ஆணிவேராய் அமைந்துள்ளது சீலமே என்பதும் தெற்றென விளங்குகின்றது.

நீதிநூல்கள் வழி சீலத்தையும், தருமத்தையும், ஒழுக்கத்தையும் கடைபிடித்து ஒழுகி வலிமையையும் இலட்சுமி கடாக்ஷத்தையும் பெற்று நலம் பல பெறுவோமாக.

# ஆளவந்தார் அநுபவித்த திருமாலின் அவயவ அழகுகள்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

"வைகுண்டேது பரே லோகே ச்ரியா
ஸார்த்தம் ஜகத்பதி: ।
ஆஸ்தே விஷ்ணுரசிந்தயாத்மா
பக்தைர் பாகவதைஸ்ஸஹ ॥

என்கிற புராண ச்லோகத்தின் படியே ஸ்ரீவைகுண்டம் என்னும் மேலான உலகில், உலகின் தலைவராயும், நினைக்க முடியாத ஸ்வரூபத்தை உடையவராயும், (ஞானுபவத்தில் ஊற்றமுடைய) பக்தர்களுடனும் (கைங்கர்யத்தில் ஊற்றமுடைய) பாகவதர்களுடனும் கூடியவராய் பெரிய பிராட்டியாரான ஸ்ரீதேவியுடன் திருமால் எழுந்தருளியிருக்கிறார். இத்தகைய பெருமை வாய்ந்த எம்பெருமானின் திருமேனி அழகையும், பெரிய பிராட்டியார் மற்றும் அநந்த கருட விஷ்வக்சேனர் முதலான நித்யஸூரிகளோடு உள்ள சேர்த்தியழகையும் பரமாசார்யரான ஆளவந்தார் உயர்ந்த ஸ்தோத்ரமான 'ஸ்தோத்ர ரத்னம்' எனும் நூலில் பதினைந்து ச்லோகங்களால் அநுபவித்துள்ளார். இந்நூலுக்கு அமைந்த பெரிய வாச்சான்பிள்ளையின் உரையைத் தழுவி எம்பெருமானின் திருமேனி அழகு முதலானவற்றைச் சுருக்கமாக அநுபவிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

எம்பெருமானுக்கு ஆடை மஞ்சள் நிறமான திருப்பீதாம்பரம் என்கிறது உபநிடதம். திருவரை பூத்தாற்போலேயிருக்கிற உடையழகோடு கூடிய எம்பெருமானை 'உடையார்ந்த ஆடையன்' என்பர் நம்மாழ்வார். இது பற்றியே 'விராஜமாந உஜ்ஜ்வல பீதவாஸஸம்' என்கிற படியே வரணச் சேர்த்தியால் அழகாயிருப்பதும் ஒளியுடையதுமான திருப்பீதாம்பரத்தை யுடையவன் என்று அநுபவிக்கிறார் ஆளவந்தார். இத்திருப்பீதாம்பரம் எம்பெருமான் திருமேனிக்குப் பரபாகமான அழகு மட்டுமின்றி அவனது ஐச்வர்யத்தையும் குறிப்பிடுவதாகும். 'அதஸீ புஷ்ப ஸங்காசம்' என்கிறபடியே காயாம் பூ போன்ற நிறமுடையவன் எம்பெருமான். 'காயாம் பூ மலர்ப்பிறங்கல் அன்னமாலை' என்று குலசேகரப் பெருமாளும் ஆழுங்கால் படுவது காண்க. இப்படிப் பட்டவனையே 'ஸமிதாதஸீ ஸூந ஸமா மலச்சவிம்' என்கிறபடியே காயாம்பூவை ஒத்த குற்றமற்ற ஒளியுடையவன் என்பர். மேலும் 'நிமக்ந நாபிம்' என்கிற படியே அழகு வெள்ளம் சுழித்தாற்போல இருக்கிற திருநாபியையுடையவன்; 'தநுமத்யம்' என்கிறபடியே மெல்லியதாய்ச் சிறிய இடையையுடையவன்; இப்படி வடிவழகாலும் ஆடையழகாலும் மேம்பட்ட எம்பெருமானின் அகன்ற மார்பில் ஸ்ரீவத்ஸம் என்னும் மறு விளங்குவதை 'விசாலவக்ஷ ஸ்தல சோபிலக்ஷணம்' என்று அநுபவிக்கிறார்.

எம்பெருமானது திருத்தோள்களோ ஸ்ரீசார்ங்கத்தில் இருக்கிற நாணித்தழும்பாலே அலங்கரிக்கப்பட்டிருக்கிறதாம். அடியார்களின் விரோதிகளை அழியச் செய்ததனால் உண்டான தழும்பையுடைய திருத்தோள்கள் என்பர் பெரிய வாச்சான் பிள்ளை. வீரத்தழும்பு வீரபுஜங்களுக்கு அழகையூட்டுமல்லவா! அடியார்களுக்குச் செல்வத்தைத் தருவதற்காக உபசரிக்கும் தோள்களாகவும், அடியார்களைக் காப்பாற்றுவதையே விளைநீராகக் கொண்டு கற்பக மரம் கிளைவிட்டாற்போல நான்கு தோள்களாகப் பிரகாசிக்கின்றனவாம். மற்றும் பிராட்டியின் திருச்செவிமலரான நீலோத்பல புஷ்பமென்ன, காதில் அணிந்த ஆபரணமென்ன, அவனது சேர்க்கையாலே சற்று அலைந்த திருக்குழல் கற்றையென்ன - இவை அழுந்திருப்பதைத் தெரிவிப்பதாக அவனது தோள்கள் ஒளி வீசுகின்றனவாம். இந்த போகச் சின்னமும் வீரச்சின்னமும் அவனது தோள்களுக்கு மங்களமாக விளங்குகிறபடி.

அவனது திருக்கழுத்தோ திருக்குண்டலங்களாலும், திருக்குழலாலும் அழகுபெற்று மூன்று கோடுகளையுடைத்தாயிருக்கிறதாம். இரண்டு சூரியர்கள் ஆபரண வேஷத்தாலே அலங்கரித்தாற்போலே திருக்குண்டலங்களாலும் திருக்குழலாலும் ஒரு சேர அமைந்த திருக்கழுத்தையுடையவனை 'உதக்ரபீந அம்ஸ விலம்பி... கந்தரம்' என்று அநுபவிக்கிறார். அவனது திருக்கு

முலின் அழகோ திருமுகத்தில் வீசுகிறதாம். தன் ஒளியாலே களங்கமற்ற பூர்ண சந்திரனு டைய ஒளியையும் அப்போது அலர்ந்த தாமரைப்பூவின் அழ கையும் தோற்பிக்கும் வகையில் அழகான திருமுகத்தையுடைய வன் எம்பெருமான்.

அவனது திருக்கண்களோ வென்னில் - 'ப்ரபுத்த' என் கிறபடியே (அடியார்களோடு சேர்ந்து இருத்தலாலே) மலர்ந் தும், 'முக்த' என்பதனால் (அவ்வாறு கலத்தலால் ஏற் பட்ட ஆனந்தத்தின் மிகுதி யால் வந்த) புதுமையையுடைய தாமரை போன்றவை. 'ஸவிப்ரு மப்ரூலதம்' என்கிறபடியே அடி யார் பக்கல் ஆதரமெல்லாம் தோற்றும்படி நெறிப்புடன் கூடி யதாய், கொடி போன்றது மான திருப்புருவங்களையுடைய வன்; 'உஜ்ஜ்வல அதரம்' என் கிறபடியே மிகவும் ஒளிவிடும் படியான திரு அதரத்தையு டையவன்; அந்த அதரத்தின் இடையில் 'சுசிஸ்மிதம்' என்கி றபடியே பரிசுத்தமான திருமு றுவலையுடையவன்; அநுபவிப் பார் மனத்தை இழுக்குமதான மென்மையான கன்னங்களையு டைவன்; உயர்ந்த திருமூக்கையு டையவன்; திருநெற்றியின் எல் லையில் வந்து அலையெறியும் படியான திருக்குழலையுடைய வனை 'லலாடபர்யந்த விலம் பிதாலகம்' என்று அநுபவிப்பர் ஆளவந்தார்.

எம்பெருமான் திருமேனி யோடு சேர்ந்த திருவாபரணங் களும் ஒளி வீசுகின்றனவாம். அதற்கேற்ப, உபய வீபூதியை ஆளும் தன்மைதோற்ற திருமுடி யில் ஒளிமிக்க கிரீடத்தையுடை யவன்; திருத்தோள்களில் தோள் வளைகள்; அகன்ற மார்பில் ஆரம், திருக்கழுத்தில் முத்து வடம், திருமாரபில் ஸ்ரீகௌஸ் துபம், திருவரையில நாண், திருவடிகளில திருச்சிலமபு முத லான பல பல ஆபரணங்க ளைப் பூண்டவன.

இந்தத் திருவாபர ணங்களோடு ஒப்புச சொல்ல லாம்படியான அழகை உண்டு பண்ணும் சக்கரம், சஙகு, நாந் தகம், கதை, வில் ஆகிய அழ கிய திவ்யாயுதங்களையுடைய வன்; இவையெல்லாவற்றுககும் மேலாக எம்பெருமானின் சேர்த் தியாலே ஒளிவிடும் திருத்து ழாயையுடைய வனமாலையா னது திருவடியளவும் தாழ்ந்து அவனது ஐச்வர்யத்தையெல் லாம் குறிப்பிடுவதாய் விளங் குகிறதாம். திருவாபரணயுதங் களை எம்பெருமான் அணிந் திருப்பதால் அவை விளக்கம் பெறுவதாகவும் அவற்றாலே எம் பெருமான் விளங்குவதாகவும் அநுபவிப்பர் பெரியவாச்சான் பிள்ளை.

இவ்வாறு திருவாபரணயுத அழகோடு சிறந்து விளங்கும் எம்பெருமான் தன் திருமார் பைப் பிராட்டிக்கு இருப்பிட மாகக் கொடுத்தவன்; பிராட்டி யின் பிறப்பிடமான திருப்பாற் கடலானது அவனது இனிய இருப்பிடமாயிற்று. இதுபற் றியே 'தவ ப்ரியம் தாம யதீய ஜந்ம பூ' என்கிறார். அந்தப் பிராட்டியோ 'குணேன ரூபேண விலாஸ சேஷ்டிதை:' என்கிறப டியே குணங்களாலும் வடிவ முகாலும் அழகிய செயல்களா லும் எம்பெருமானுக்குப் புது மையான மகிழ்ச்சியைத் தரு பவள்; பர, வியூஹ, விப வம் முதலான எல்லா நிலை களிலும் எம்பெருமானுக்குத் தகுந்தவள்; எல்லாவற்றுக்கும் மேலாக பிராட்டி 'விஷ்ணோ: ஸ்ரீ' எனகிறபடியே எமபெரு மானுககுச் செலவமாவாள.

இவ்வாறு செல்வமான பிராட டியோடு கூடிய எம்பெரு மான, திருமேனியில் மென்மை, குளிர்ச்சி, நாறறம் இவற்றை ஸ்வபாவமாகவுடைய திருவனந் தாழ்வானாகிற ஆதிசேஷன மேல் எழுந்தருளியிருக்கிறான. பிராட்டியோடு கூடியிருப்பதால் வந்த பெருமைபோல ஆதிசே ஷனோடு சேர்த்தியும பெருமா னுக்குப் பெருமையாக வாயத் தது என்பர். எம்பெரு மான் அடியார்களைக் காப்பாற் றுவதற்குறுப்பான எண்ணற்ற குணங்களையுடையவன்; அது போல ஆதிசேஷன் எம்பெரு மானுக்கு கைங்கர்யம் செய் வதற்குறுப்பான எண்ணற்ற குணங்களையுடையவன்; இது பற்றியே எம்பெருமான் போல சேஷனும் அனந்தன் எனப்ப டுகிறான். அவன் ஞானத் துக்கும் வலிமைக்கும் நிகரற்ற இருப்பிடமானவன்; தன் படங் களிலிருக்கும் மணித்திரட்சியின் கிரண மண்டலங்களாலே ஒளி விடும் மத்யப்ரதேசத்தையுடைய எம்பெருமானின் திவ்ய அந் தப்புரத்தில் இருப்பவன்; எம் பெருமான் எழுந்தருளும் திருமா ளிகை, கண் வளரும் படுக்கை, வீற்றிருக்கும் சிங்காதனம், திரு வடிகளில் பாதுகை, இடுப்பில் திருப்பரிவட்டம், சாயும் அணை, மழைக்கும் வெயிலுக்கும் இடை, மற்றும் பலபடியாக இருக்கிறா னாம் திருவனந்தாழ்வான்.

இவ்வாறு அனந்தனைப் படுக்கையாகக் கொண்டு எழுந் தருளியிருக்கும் திருமாலுக்கு அடியவனாயும் நண்பனாயும் வாகனமாயும் சிங்காதனமாயும் கொடியாயும் வெயிலைப்போக் கும் மேற்கட்டியாயும் சாமரமா

யும் இருப்பவன் பெரிய திருவடியெனனும் கருடாழ்வானாவான். அவன் 'த்ரயீமய:' என்பதனால் வேதத்திலுள்ள சந்தஸ்ஸுக்களை அவயவமாகக் கொண்டவன்; அதாவது வேதசரீரன்; எம்பெருமானோ அந்த வேதங்களால் அறியப்படுபவன்; அந்த கருடன் எம்பெருமானைப் பிரகாசிப்பிக்கும் நிலைக்கண்ணாடி போலவும் மோம்பழம் போலவும் அவன் முன்பே எப்போதும் கிட்டியிருப்பவன்; இது பற்றியே 'தேந கருத்மதாபுர: உபஸ்திதம்' என்கிறார். மேலும் எம்பெருமான் தன் மேல் உட்கார்ந்து திருவடிகளாலே நெருக்கின தழும்பு தனக்கு அடையாளமாய் விளங்கி நிற்பவன்; எம்பெருமானுக்கு ஸ்ரீகௌஸ்துபம் போலே கருடனுக்கு அத்தழும்பு அடையாளமாகும்.

மற்றும் சேனைமுதலியார் முதலான நித்ய சூரிகளால் சேவிக்கப்படுகிறவன் எம்பெருமான். தேவர்களுக்கெல்லாம் தலைவரான சேனை முதலியார் எம்பெருமான் அமுது செய்து மிகுந்த சேஷத்தை உண்பவர்; 'நம்மைக்காட்டிலும் பெரியவன்' என்றும் 'ஸமர்த்தன்' என்றும் கௌரவம் தோற்ற எம்பெருமானாலே உபய விபூதியை நிர்வகிக்கும் பாரத்தை வைக்கப் பெற்றவர்; 'எந்தக் காரியம் எம்மாதிரி உம்மால் விண்ணப்பம் செய்யப்பட்டதோ அவ்வண்ணமே செய்வது' என்று அருள் நிரம்பிய கடாக்ஷத்தாலே எம்பெருமானால் நியமிக்கப்படுமவர்.

மற்ற நித்ய சூரிகளோவெனில் வருத்தங்களேதுமின்றி சரீர சம்பந்தமான குற்றங்கள் ஏதுமில்லாதவர்களாய் ஒரு காரணமுமின்றி இயல்பாகவே எப்போதும் எம்பெருமான் கைங்கர்யத்தையே போக்யமாக எண்ணி அவ்வெம்பெருமானைச் சேவித்து வருகின்றனர்.

இங்ஙனே, எம்பெருமான் தன் ஸ்வரூபம், ரூபம், குணம், செல்வங்கள் ஆகியவற்றால் நிறைந்தவனாய், நித்ய விபூதியான பரமபதத்தில் எழுந்தருளியிருக்கிறார். இவ்வெம்பெருமானை மேற்கூறியபடி ஆளவந்தார் அநுபவித்து

பவந்தமே வாநுசரந் நிரந்தரம்
ப்ரசாந்த நிச்சேஷ மநோரதாந்தர:|
கதாऽஹமைகாந்திக நித்ய கிங்கர:
ப்ரஹர்ஷ யிஷ்யாமி ஸநாத ஜீவித:||

என்கிறபடியே தன் ஸத்தைக்கு ஏற்ப நித்ய கைங்கர்யத்தைப் பெற விழைகிறார்.

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.



அண்மையில் இந்தியப் பிரதமர் திரு. எச்.டி. தேவகௌடா அவர்கள்
மற்றும் ஆந்திரமாநில முதல்வர் திரு. என். சந்திரபாபு நாயுடு அவர்கள்
திருமலைக்கு வருகை புரிந்தபோது

(சென்ற இதழ்த்தொடர்ச்சி)

# திருவேங்கடத்தந்தாதி

திரு. லா. ஸ்ரீநிவாஸன் - புதுதில்லி.



(51) தாய்மார்களே! மன்மதன் இவளை வாட்டுவதன் முன்பே, முன்பு வெண்ணெய் உண்ட திருவேங்கடமுடையானின் திருவடிப் புழுதியை இவளுக்குக் காப்பாக இடுங்கள். (தோழியின் வாக்கு)

(52) சேஷகிரியின் மேல் எழுந்தருளியுள்ள வேங்கடவா! அடியேன் ஒருமுறை பணிந்தால் (சரணாகதி செய்தால்) நீ உனது இருதிருவடிகளையும் அளிப்பதன்றோ முறை. அங்ஙனே ஏன் செய்யவில்லை?

(53) அடியவர்க்கு வைகுந்தமளிக்கும் திருவேங்கடவா! முன் கேசி என்று குதிரையின் வாயைப் பிளந்தவனே! தொண்டைமான் சக்ரவர்த்திக்கு நீ சங்கு ஆழிகளைக் கொடுத்தால், அவற்றை அவனிடம் பெறாமல் என் பெண்ணிடம் ஏன் வாங்கிக்கொள்கிறாய்? (என் பெண்ணின் ஆழி, சங்கு, அதாவது மோதிரம் சங்குவளை, இவற்றை ஏன் அபஹரிக்கிறாய், பிரிவினால் அவை கழலும்படி பண்ணுகிறாய்?)

(54) மாதவன் என்ற திருநாமமுள்ள வேங்கடவா! அஜ்ஞானத்தை ஒழிக்கும் சூர்யனே! பிருந்தாவனத்தில் விளையாடினவனே! சபரியின் விருந்தை ஏற்றவனே! உன் பிரிவால் இளம் பிறையின் நிலவு என் பெண்ணுக்கு நெருப்பைப்போல் சுடுகிறதே!

(55) கவிகாள்! நரஸ்துதியால் என்ன பயன்? திருவெள்ளரையிலும் திருவரங்கத்திலும் திருவேங்கடத்திலும் எழுந்தருளியுள்ள எம்பெருமானையே பாமாலைகள் கொண்டு போற்றுமின்.

(56) திருவரங்கம், திருக்குடந்தை, திருக்குருகூர், திருக்குறுங்குடி, அட்டபுயகரம், திருக்கண்ணமங்கை, திருநறையூர், திருக்கடன்மல்லை, திருக்கச்சி, திருக்கண்ணபுரம், கண்

டியூர், தஞ்சை, திருமாலிருஞ் சோலை, திருப்புலலாணி, திரு மெய்யம், திருப்பாற்கடல், பரம பதம் ஆகியவை திருவேங்கட முடையானுக்கு உரிய தலங்க ளாம்.

(57) குவலயாபீடத்தின் தந் தங்களை ஒசித்த திருவேங்கடவ னின் திருவடிகளை வணங் காது, இரணியனைப்போல அஹங்காரத்தால் தங்களை பக வானுக்கு ஸமமாக நினைப்ப வர்களுக்கு எம்பெருமான் ஒருநா ளும் பயன்படமாட்டான். (ஜீவ னும் பரமாத்மாவும் ஒன்றல்ல.

(58) பூமியை இடந்த ஞான வராஹப்பிரான் பெரிய ரூபம் எடுத்த போது, அண்டங்களெல் லாம், அத்திப்பழங்கள் அத்திம ரத்தில் ஒட்டிக்கிடப்பதுபோல, திருவடிகளில் ஒன்றிக்கிடந் தன. தேவர்கள் ஆகியோர் அத்திப்பழங்களை மொய்க்கும் கொசுக்கள் போலிருந்தனர். என்னே திருவேங்கடமுடையா னின் பெருமை!

(59) தாய்மார்களே! இப்பெண் திரு வேங்கடமுடையானை நேசிக்கி றாள், வேறொரு சிறுதெய் வத்தையல்ல. எனவே அச்சிறு தேவதையை த்ருப்தி செய்வதற் காக ஆடுவெட்டுதல் முதலி யவற்றைத் தவிருங்கள். திருமா லின் திருநாமங்களையே சொல் லுங்கள். அதுவே இவளைக் காக்கும் வழி.

(60) கஜேந்திரனைக் காத்து பசுக்களை மேய்த்த திருவேங்க டத்தானை வணங்காமல் வேச் யைகளுடன் கூடி குணக்கேட்டி னால் அழிபவர்கள் உயிருடனி ருந்தும் செத்த பிணத்துக்கு ஸமானமானவரே.

(61) தன்னைச் சரணமடைந்த வர்களை, வேதங்களாலும் முழு தும் அறிய முடியாத வைகுந் தத்தில் சேர்ந்தருளும் திருவேங் கடவன் முன்பு உலகங்களை யும் விழுங்கினான், தயிரை யும் விழுங்கினான். அவனைத் தொழாதவர்களுக்கு பிறப்பிறப் பாகிய ஸம்ஸாரம் நீங்குமோ? ஒருகாலும் நீங்காது.

(62) முதலையினின்று யானை யைக் காத்தவனே! இராமனாக அரக்கர்களை அழித்தவனே! திருவேங்கடவா! எனது அந்திம தசையில் உனது திருவடியின்றி எனக்கு வேறு ரக்ஷகமில்லை. அதை அளித்துக் காக்க வேண் டும்.

(63) அசுரர்களைப் பஞ்சா யுதங்களாலும் அழிக்கும் எம் பெருமான் நின்ற திருக் கோலமாய் எழுந்தருளியிருக்குமி டம் திருவேங்கடம், சயனித்த குடம் திருப்பாற்கடல்; அவத ரித்த இடம் அயோத்தி; நடந்து சென்ற இடம் கொடிய கானகம்; வீற்றிருக்கும் இடம் பரமபதம்.

(64) பூமிக்குத்திலகம் போன்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியி ருக்கும் திருமாலே! நீ உனது உந் தியில் தாமரைப்பூவைத் தோற் றுவிக்காவிடில் பிரமன் முதலிய தேவர்களுக்கும் மற்ற பல்லுயிர் களும் உலகங்களும் எங்ஙனே தோன்றும்?

(65) எங்கும் நிறைந்த திரு வேங்கடவா! சிற்றின்பங் களின் தீமையை அறியாது அவற்றை விரும்பும் பஞ்சேந்த் ரியங்கள் ஓய்ந்து மரணம் ஏற் படும் போது உன் தாமரை போன்ற திருவடிகளைத் தந்த ருள வேண்டும்.

(66) பிரமன், சிவன், இந் திரன் முதலிய தேவர்களால் துதிக்கப்படும் திருவேங்கட வனே அனைத்துக்கும் கார ணமாவான். திருமகள் கேள் வன், உலகையுண்டவன், நாரா யணன் என்று இங்ஙனே அவன் குணங்களையும் செயல் களையும், திருநாமங்களையும் சொல்பவர்களின் தீவினையெல் லாம் ஒழியும்.

(67) பிறர்க்குப் பயன்படாத செல்வத்தால் செருக்குள்ளவர்க ளைப் பின்பற்றுகிறீர்களே! இனியேனும் நல்ல கதியைச் சிந்தியுங்கள். வானோங் கும் திருவேங்கடமலையி லுள்ளானை அஷ்டாக்ஷரமந்த் ரத்தைக் கொண்டு த்யானித்துத் துதியுங்கள்.

(68) இனிய அருவிகள் சேர்ந்த திருவேங்கடமலையில் எழுந்தரு ளியுள்ளவனை வணங்கினவர் களே பின்பு இந்திரன், சிவன், பிரமன் முதலிய பதவிகளை அடைகின்றனர்.

(69) எருக்கஞ்செடி பெரிய மரத்துக்கு ஒப்பாகுமா? நக்ஷத் திரங்கள் சூரியனுக்கு உவமை யாகுமா? தேவர்களும் முனிவர் களும் திருவேங்கடவனின் அடி யார்களுக்கு நிகராவார்களா?

(70) பரசுராமனைத் தோற் கடித்த திருவேங்கடமுடையா னின் பூவார் கழலைத் தொழாது, வேதங்களையும் சாஸ்திரங்களையும் பொய் என்று கூறி சிற்றின்பத்தையே விரும்புவார் நல்ல கதியை அடையார்கள்! அந்தோ!

(71) உடலை வளர்ப்பதற்கே செல்வத்தைத் தேடி உழலும் நெஞ்சே! பிரமன், சிவன் முத லிய எல்லா தேவர்களும் ஒருங் காக வணங்கும் திருவேங்கடவ னின் திருவடிகளையே அடை.

(72) வெண்ணெய் விழுங்கி யசோதையால் கட்டுண்ட திரு

வேங்கடத்தான் திருமகளையும் கௌஸ்துபத்தையும் தன் மார்பில் அணிந்துள்ளான். அவனிடம் மையல் கொண்ட எனது தனங்களில் அவனுடைய திருத்துழாய்மாலை பொருந்துவது என்றோ? (தலைவியின் கூற்று)

(73) பறவை எனும்பரம்புருடனும், நெய்யை அமுது செய்த கண்ணனுமான திருமலையப்பனின் தாமரை போன்ற திருவடிகள் கஜேந்திரனைக்காக்க அவன் முன் நின்றன, சகடாசுரனை உதைத்தன, உலகங்களை அளந்தன, சீதையுடன் காட்டில் நடந்தன.

(74) கபாலியான சிவனும் பிரமனும் உலகங்களை உண்ட திருவேங்கடவனைத் தொழுவர். அவனது தாமரைத்தாள்கள் எனது மனதில் பொருந்தியுள்ளன. எனவே, கடும்பிணிகாள்! என்னைவிட்டு நீங்கி கானகத்துக்குச் செல்லுங்கள்.

(75) தேவர்கள் வணங்கும் வேங்கடவா! ஆதிசேஷனை சயனமாக உடையவனே! பரிசுத்தமான மனம் மெய் மொழி இவற்றால் உன்னை த்யானித்து, நமஸ்கரித்து, தொழுகின்ற அடியார்களுடன் சேர்ந்தேன். இதன்றி கர்ம ஜ்ஞான, பக்தி யோகங்களை அறியேன்.

(76) சிவனையே தொழுது, நாராயணனின் நாமம் காதில் விழக்கூடாது என்று காதுகளில் மணிகளை கட்டிக்கொண்டு திரிந்த கண்டா கர்ணன் என்ற பூதகணநாதனுக்கும் திருவேங்கடவன் பரமபதத்தைத் தந்தருளினான் அன்றோ?

(77) எனது ஸ்வாமியும், திருமார்பிலே பொன்னாலாகிய பூணூலை அணிந்தவனும், பாற்கடலில் பள்ளி கொள்பவனும், ‘ஆதிமூலமே!’ என்ற யானைக்கு அபயமளித்தவனும், காளியன் மீது பாய்ந்தவனுமான வேங்கடத்தானின் திவ்ய சரிதங்கள் என் காதுகளில் செல்லுமேயன்றி பொய்ச் சமய நூல் பொருள்கள் அவற்றுள் நுழையா.

(78) கோனேரிவாழ் குருகினங்காள்! விரஹதாபத்தால் வருந்தும் எனது மோஹத்தையும், புல்லாங்குழலிசை என் காதுகளைச் சுடுவதையும், உற்றார் எனக்கு சைத்யோபசாரம் செய்வதையும் தமிழ்த்தலைவரான திருமங்கையாழ்வாரின் பாடல்களைப்பெற்ற திருவேங்கடமுடையானிடம் முறையிடுங்கள் (தலைவி விடுதூது)

(79) திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகியோரின் தமிழ் வேதப்பாமாலைகளால் தெய்வத்தன்மையான நறுமணம் வீசப்பெற்ற அரங்கனும், முன்பு அரக்கர்களை அழித்த திருவேங்கடேசனுமே உங்கள் வினைகளை அறுக்கவல்லவர்கள். அவர்களின் திருவடிகளிலேயே ப்ரார்த்தியுங்கள்.

(80) சேஷகிரிவாஸியான வேங்கடவனே வராஹ அவதாரத்தில் ஹிரண்யாக்ஷகனைக் கோரைப்பற்களால் குத்தியும், சிங்கப்பிரானாய் இரணியனின் மார்பைப் பிளந்தும், இராமனாய் இராவணன் மீது அம்புகளை எய்தும், கண்ணபிரானாய் கம்ஸனை உதைத்தும் கொன்றான்.

(81) வேதங்கள் போற்றும் வேங்கடவா! திருமகள் கேள்வா! அடியேன் மனத்தின் வஞ்சனைகளையும், அறிவின் மாறுபாட்டையும், கோபத்தையும், சிற்றின்ப விருப்பத்தையும், பொய்யையும் ஒழித்து உன் திருவடிகளை த்யானிப்பது எப்போதோ?

(82) ஆயுதங்களில் சிறந்த திருவாழியை உடையவனும், கடலை வற்றடித்தவனுமான திருமலையப்பன் உலகளந்தபோது அவன் திருவடி வைப்பதற்கே பூமி முழுவதும் போதவில்லை. திருமுடியோ அண்ட கோளத்தின் மேன்முகட்டைத் தாக்கியது. திருமேனி பொருந்துவதற்கு எட்டுத் திக்குகளும் போதாவாயின. இப்படியிருக்க, உலகுகளை அளக்க திருவடிகளை எடுத்து வைப்பது எங்ஙனேயோ?

(83) குவலயாபீடத்தின் தந்தங்களை ஒசித்தவனும், திருத்துழாய்மாலை அணிந்தவனும், பிரமனைப் படைத்தவனும், சகடத்தைச் சாடினவனும், பசுக்களை மேய்த்தவனும், அர்ச்சுனனின் தேரை ஓட்டினவனும், நான்கு வேதங்களால் போற்றப்பட்டவனுமான திருவேங்கடமுடையானை த்யானித்தால் உங்கள் துன்பங்களெல்லாம் நீங்கும்.

(84) மனமே! பிரமனோ சிவனோ அழைத்தாலும் அவர்களிடம் விருப்பம் கொள்ளாதே. திருமாலடியார்களுடனேயே சேர். மதிள் சூழ்ந்த திருவரங்கத்திலும் திருவேங்கடத்திலும் எழுந்தருளியுள்ள திருமாலே பிறப்பை ஒழித்து வாழச் செய்வான்.

(85) கம்ஸனால் ஏவப்பட்ட பகாசுரனைக் கொன்றவனும், பாணாசுரயுத்தத்தில் சிவனைப் புறம்காட்டி ஓடச்செய்தவனும், தாமரையாள் கேள்வனும், திருமலையில் எழுந்தருளியிருப்ப

வனுயான திருமாலின் திருவடிகளில் என் கொடிய மனது காந்தத்தினால் கவரப்பட்ட ஊசிபோல எப்போது சேரப்போகிறது?

(86) மனக்குழப்பங்களையும் வியாதிகளையும் மரணத்தையும் கொடிய வினைகளையும் ஒழிக்க விரும்புகிறவர்களே! வடவேங்கடத்தில் ஸ்ரீவத்ஸத்தையும் இலக்குமியையும் மார்பில் கொண்ட கோதண்டபாணி தன்னைச் சரணமடைந்தவர்களை விலக்க அறியான், அடியவர் அனைவரும் வாழ அருள் புரிபவன்.

(87) பஞ்சாயுதங்களையுடைய வேங்கடாசலபதி வேயங்குழலின் இனிய ஓசையுடையவன், மண்ணும் விண்ணும் உய்ய அவதாரங்கள் செய்தவன் என்று மெய்யை உணர்ந்து அனுஸந்தித்தால் பரமபதம் கிடைக்கும். அங்ஙனன்றி அவன் கர்மவச்யனாய் நம்மைப்போல் பிறக்கிறான் என்று நினைத்தால் கொடிய நரகமே நணணுவீர்.

(88) மீனும் ஆமையும் ஆன வேங்கடவா! இதுவரை எல்லா நரகங்களிலும் சென்று வருந்தின பாவியான எனக்கு மகளிர் மேலுள்ள ஆசை நோய் தணியவும், தத்வஜ்ஞானம் உண்டாகவும், பரமபதம் கிடைக்கவும், காளியன் மேல் நடமாடிய உனது திருவடிகளை என் தலையின் மேல் இப்போதே வைத்தருள்க.

(89) மனைவாழ்க்கை நிலையென்றெண்ணி அதற்காகப் பொருளீட்ட வெகுதூரம் சுற்றியலைபவர்களே! இனியராயினும் முக்திபெற விரும்பினால் சிங்கங்களோடு யானைகள் பின்வாங்காமல் போர் செய்யும் சேஷகிரியில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை வணங்குங்கள்.

(90) வேத சாஸ்திரங்களில் தேர்ந்த பிரமனும் மற்ற தேவர்களும் அசுரர்களால் வருந்திமுறையிட, திருவேங்கடவன் கருடன்மேல் எழுந்தருளி துயரை ஒழித்தான் என்று சொன்னால் அவர் எனக்குக் கருணைபுரியாவிடினும், அவ்வார்த்தையே என் மனதை மெழுகுபோல் உருகச்செய்கின்றது.

(91) (தலைவியின் தோழி முறையிடுதல்) 'களவில் இவளுடன் சேர்வதற்காக நீர் அஞ்சாது வரக்கூடிய தேஹபலம், மநோபலம், தந்திரம், வஞ்சனை, படைக்கலத்தேர்ச்சி யாவும் உடையவரேயாயினும், உமது வரவு எங்களுக்குத் துன்பமாகத் தோன்றுவதால், இனி இருளில் இங்ஙனே வருவது தகாது!

(92) திருவேங்கடமலையில் மரகத ரத்னம் போல் ஒளியுடன் விளங்கும் பரம்பொருளானது கட்டழகுள்ள யசோதைக்கு முத்துப் போன்றதாகவும், திருமாமகளுக்குக் கண்களின் கருவிழி போன்றதாம்; அடியவர்க்குப் பேரின்பப்பெருக்காம்; இழிகுணமுள்ள அசுரர்க்கு என்றும் பகையாம்.

(93) குதிரைவடிவில் வந்த கேசி என்ற அசுரனை மாய்த்த திருவேங்கடவனின் மலைகள் போன்ற புஜங்கள் மரகதமென்னும் பச்சைரத்னத்தைக் கடைந்தது போன்றுள்ளன; தம்மை வாழ்த்தின அடியார்க்கு நரகத்தை அழித்து பரமபதத்தை அளித்தன; நப்பின்னையை மணக்கும் பொருட்டு ஏழு எருதுகளைத் தழுவி வலியடக்கின.

(94) கடலையணைக்கட்டி இலங்கையையடைந்து இராவணனைக் கொன்றவனும், நப்பின்னையால் ஆலிங்கனம் செய்யப்பட்டவனுமான திருவேங்கடவனைத் துதிக்கவல்லார்க்கு எவ்வகைத் துன்பமும் கிடையாது.

(95) பிரமன், சிவன், இலக்குமி ஆகிய மூவருக்கும் தன் திருமேனியில் இடம்கொடுத்தவனும், ப்ரளயத்தில் உலகையும், கண்ணனாய் தயிரையும் நெய்யையும் விழுங்கியவனுமான திருவேங்கடத்தானின் திருநாமங்கள் தம்மை அநுஸந்தித்தவர்களுடைய துன்பங்களையும், பிறப்புக்களைப் போக்கி அந்தமில் பேரின்பத்தையும் அருளும்.

(96) உலகை சூழ்ந்த கடலே! திருவேங்கடமுடையானின் பிரிவால் நான் முத்து போன்ற கண்ணீரைச் சொரிகிறேன், நீயும் முத்துக்களைச் சிந்துகிறாய்; நான் புலம்புகிறேன், நீயும் ஒலிக்கிறாய்; நான் உறங்குவதில்லை, நீயும் அமைதியுற்றிருக்கிறாய். நீயும் அவன் பிரிவால் வருந்துகிறாயோ? (தலைவி கடலைக் குறித்து வினவுதல்)

(97) (விளம்பித்து வந்த தலைவனுடன் தலைவி ஊடுதல்) ஆலிலைப் பள்ளி கொள் வேங்கடவா! நீ எம்முடைய சிறு முற்றத்தையும் பந்தையும் ஆடுதற்குரிய கழல்களையும் முன்னமே கொண்டு ஓடினாய்; பின்பும் தீமைகள் தவிரவில்லை; அவற்றையெல்லாம் பொறுத்தோம்; இப்போது உனது திருவடித்தாமரைகளால் எமது சிறுவீட்டை சிதைத்தற்கு ஈடாக எமக்கொரு பெருவீட்டைச் செய்துகொடு.

(98) திருவேங்கடவா! போக்குதற்கரிய பாவங்களையுடைய

வனும், பொய் பேசுபவனும், காமுகனும், கள்வனும், கருணை யற்ற கடின சித்தமுடையவனும், ஆறுத கோபமுடையவனும், ஆசையினின்று மீளாதவனும் ஆன அடியேனை உன் திருவடிக்கு ஆளாக்கிக் கொண்டாலன்றோ உன் திருவருளுக்கு சிறப்பு ஏற்படும்.

(99) பேதை மக்களே! உங்களிடம் அஷ்டாக்ஷரமந்திரமில்லை, சங்கு சக்கர முத்திரையில்லை, திருமண் காப்புமில்லை, சரணாகதியுமில்லை, இரணியனை முடித்தவனின் திருவேங்கடமலையடிவாரத்திலும் நீங்கள் சென்றிலீர்; இத்தகைய நீங்கள் கருமத்தினால் திரண்ட ஊழ்வினைத் தொகுதியை எங்ஙனே நீக்க நினைக்கின்றீர்கள்?

(100) திருக்கடன்மல்லையையும் திருப்பாற்கடலையும் பரமபதத்தையும் திருவேங்கடத்தையும் இடமாகவுடைவன் அடியேனுக்கருளிய சீர்ப்பாதங்கள் பிறவி நோயை ஒழிக்கும் மருந்தும், உயிரும், பாதுகாப்பும் ஆகும். அவன் பரமபதத்தில் தந்தருளும் பேரானந்தப் பெருக்கும் தாய்தந்தையருமாகும்.

கடைசியாக ஒரு சிறப்புப் பாயிரத்துடன் நூல் முடிவடைகிறது. அதன் பொருள் வருமாறு:

ஆசாரியரான ஸ்ரீபராசரபட்டருடைய பரிசுத்தமான திருவடிகளில் பக்தியினால் ஸம்பந்தம் பெற்ற அழகிய மணவாளதாஸன் (பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்) விரும்பிப் பாடிய இந்த சிறந்த அந்தாதி ப்ரபந்தமான நூறு கட்டளைக் கலித்துறை செய்யுள்களும் வெண்ணெயுண்ட வேங்கடவாணனுக்கு ப்ரியமானவையாம்.

முற்றும்.

# கார்த்திகை விளக்கு

திரு. மீ. சீனிவாசன் - பரமக்குடி.

ஒரு நாட்டின நாகரீகம பணபாடு எனபன வற்றை உணரவதற்கு அந நாட்டு மககளால கொணடாடபபடும விழாக்கள பெரிதும துணை செயவன ஆகும. தமிழ நாட்டின தகைசானற உயரிய பணபு நலனகளை விளககுகினற விழாககள பலவற்றுள திருககாரததிகை விழா தலைசிறநததாகும.

திருஞான சமபநதர திருமயிலையில பாடிய பூமபாவைப் பதிகததில "தொல்கார்ததிகை நாள!" என வியநது போற றுகினறார.

"வளைககை மட நல்லார் மாமயிலை
வண்மறுகில
துளககில் கபாலீச்சுரத்தான்
தொல்கார்த்திகை நாள்
தளத்தேந் திளமுலையார்தையலார்
கொண்டாடும்
விளக்கீடு காணுதே போதியோ
பூம்பாவாய"

இனறைக்கு 1300 ஆணடு கட்கு முன வாழ்நத திருஞான சம்பநதரே "தொல்காரததிகை நாள!" எனக் குறிபபிடுவதால் கார்ததிகை விழாவின் தொன மையும் பெருமையும நமககு விளஙகுகிறது.

கார்த்திகை விழாவில் பெண கள் வீடுகள்தோறும் வரிசை வரிசையாக மிகப் பல விளககுகளை ஏற்றி வைதது மகிழ்வர். எனவே இதனைத் தேவாரம் "தையலார் கொண்டாடும் விளக்கீடு!" எனப புலப்படுத்து கிறது.

மனைககு விளககமாகத திகழும மடவாரகள விளககேற்றி விழாக கொணடாடுதல பொருந தமனறோ!

வெபபம மிகக பாலை நிலைககாட்டில சிவநத இலவம பூககள மலரநதிருபபது மகளிர பலரும மகிழவுடன கூடி ஏற்றி வைதத ஒளி மிகக விளக்குகளின் வரிசைகளைப போல உளளது என அகநானூற்றில ஔவைப் பிராட்டியார கூறுகிறார.

வானம ஊரநத வயங்கொளி
மண்டிலம்
நெருபபெனச் சிவந்த உருப்பவிர்
அஙகாட்டு
இலையில மலர்ந்த முகையில்
இலவம்
கலிகொள ஆயம் மலிபுதொகுபு
எடுத்த
அஞசுடர் நெடுங்கொடி பொற்பத்
தோன்றிக்
கயநதுகள ஆகிய பயந்தபு கானம.
-(அகநானூறு 11)

இப பாடலில, "கலிகொள ஆயம மலிபு தொகுபு எடுதத!" என்னும் தொடருககு, "ஆரவாரம மிகுநத மகளிர கூட டம மகிழ்நது திரண்டு ஏற்றி வைதத!" எனபது பொருள்.

நககீரர தம் தெயவ உணர்வு மாட்சிமை தோன்ற விளக் கீட்டு விழா, கார்த்திகை மாதத் துக் கார்த்திகை பௌர்ண மியை ஒட்டி நிகழும் எனபதை அகநானூற்றில விளககுகிறார்.

"மழைகால் நீங்கிய மாசு விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர
மதி நிறைந்து
அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்
மறுகு விளக்குறுத்து மாலை தூக்கிப்
பழ விறல் மூதூர்ப் பலருடன்
துவன்றிய
விழவுடன் அயர வருகதில் அம்ம!"
-(அகம் - 141)

பாலை பாடிய பெருங் கடுங்கோதமது இரண்டு பாடல் களில காரத்திகை விழாவை அழகுறச சுட்டிப் பாடுகின்றார.

"அருவியான்ற உயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம போலப்
பலவுடன்
இலையில மலர்ந்த இலவமொடு
நிலையுயர் பிறங்கல் மலை
இறந்தோரே!"
-(அகம் - 185)

தலைவன கடந்து சென்ற மலையின கண சிவநத இலவம பூக்கள் மலரநதிருக்கும் காட்சி கார்த்திகை விளககுகள் போல இருக்கின்றனவாம்.

மேலும் காடுகளில் கோங்க மலர்கள் பூத்துக் குலுங்குவதும் கார்த்திகை விளககு வரிசைகள் போல் உளளதாம்.

"கண்டிசின் வாழியோ குறுமகள்
நுந்தை
அறுமீன் பயந்த அறங்செய் திங்கள்
செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே"
-(நற்றிணை - 202)

நாடு முழுவதும் மகிழ்நது கொண்டாடப்படும் பெருவிழா கார்த்திகை என்பதனை, முத் தொள்ளாயிரம்,

"குடத்துள் விளக்கே போல்
கொம்பன்னார் காமம்

புறப்படா பூந்தார் வழுதி-
புறப்படின்
ஆபுகும் மாலை அணிமலையில்
தீயே போல்
நாடறி கௌவை தரும்''
என்று பாடுகிறது.

கழுமலம் என்னும் இடத்தில் கணைக்கால் இரும்பொறையோடு நிகழ்த்திய போரில் போர்க்களத்தில் பல இடங்களிலும் செக்கச் செவேலென இரத்தத் துளிகள் சிந்தியிருப்பது கார்த்திகை விளக்குகள் போன்றிருந்தன என களவழி நாற்பதில் பொய்கையார் பாடுகின்றார்.

சிவபிரான் சோதியாய் சுடராய் சூழொளி விளக்காய்த் திகழ்கிறான். ஒளிகளுக்கு எல்லாம் மூல காரணன் சிவபெருமானேயாகும். சூரியனும், சந்திரனும், அக்னியும் தம்முடைய ஒளியை இறைவனிடமிருந்தே பெறுகின்றன. எனவேதான் மாணிக்கவாசகர்.

"சோதியே! சுடரே! சூழொளி
விளக்கே
சுரி குழற் பணைமுலை மடந்தை
பாதியே! பரனே! பால் கொள்
வெண்ணீற்றாய்
. . . . . . . . . . .
நீதியே செல்வத் திருப்பொருள்
துறையில்
நிறை மலர்க் குருந்தேவிய/ சீர்
ஆதியே அடியேன் ஆதரித்து
அழைத்தால்
அதெந்துவே என்றருளாயே!"

என்று பாடுகின்றார். திருநாவுக்கரசரோ இல்லத்திற்கு ஒளி கொடுப்பதும், இருளை அழிப்பதும், மன விளக்காகவும், சோதிப்பிழம்பாகவும், பலரும் காண்பதாகவும், நல்லக விளக்காகவும் இருப்பது நமச்சிவாயமே ஆகும் எனப் பாடுகின்றார்.

"இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்க சோதி உள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே!"

சிவஞான சித்தியாரோ! "தேயமார் ஒளிகள் எல்லாம் சிவன் உருத்தேசே ஆகும்!" எனப் பகர்கின்றது.

சிவபெருமான் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம என ஐந்து வடிவினனாக இருக்கிறான். இவற்றுள் நெருப்பு வடிவினனாக திருவண்ணமலையில் ஸ்ரீ அண்ணமலை நாதனாகவும் அருணசலேஸ்வரனாகவும் வீற்றிருக்கிறான். இப் பெருமானே திருக்கார்த்திகை விழாவின் நாயகன் ஆவான். இப்பெருமான் ஜோதி வடிவில் காட்சியளிக்கும் நாளே திருக்கார்த்திகை நாளாகும். அன்று அப்பெருமானை வணங்குவோர் தீவினைகள் அகலும் என்பதை

உண்ணமுலை உமையா ளோடும்
உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமாள் மலை
திருமாமணி திகழ்
மண்ணார்ந்தன வருவித் திரள்
மழலை முழுவ திரும்
அண்ணமலை தொழுவார் வினை
வழுவா வண்ணம் அறுமே!

என்கிறார் திருஞான சம்பந்தர்.

திருவண்ணமலைக் கார்த்திகைத் தீபம் நாடறிந்த ஒரு பெரு நிகழ்ச்சியாக மக்கள் அனைவராலும் அறியப்பட்டுக் கொண்டாடப் பட்டமையால் "குன்றின் மேலிட்ட விளக்கு!" என்னும் பழமொழி தோன்றிடக் காரணமாயிற்று. சீவக சிந்தாமணி எனும் நூலில் திருவண்ணமலை கார்த்திகைத் தீப விழாவைப் பற்றிய குறிப்பு உள்ளது.

"மலை போன்ற மார்பில் ஒருவன் செங்குவளை மலரகளால் தொடுக்கப்பெற்ற மாலை அணிந்திருந்தமை திருவண்ணமலைக் குன்றின் மீது ஏற்றி வைக்கப்படும் கார்த்திகை விளக்குகளைப் போன்றிருந்தது" என அது கூறுகிறது.

"தார்ப்பொலி தரும தத்தன்
தக்கவா றுரைப்பக் குன்றில்
கார்த்திகை விளக்கிட்டன்ன
அடிகமழ் குவளைப் பைந்தார்
போர்தத்தன் அகலம் எல்லாம்
பொள்ளென வியர்த்துப் பொங்கி
நீர்க்கடல் மகரப் பேழ்வாய்.
மதனன் மற்று இதனைச்
சொன்னான்!

ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்சோதியாக எல்லா வகை ஒளிப் பொருள்களுக்கும் ஒளிதரும் பேரொளிப் பிழம்பா

## பாகவதன்

பாகவதன் என்ற சொல்லில் ஒவ்வொரு எழுத்திற்கும் பொருளுண்டு.

| | | |
|---|---|---|
| பா | = | பக்தி |
| க | = | ஞானம் |
| வ | = | வைராக்கியம் |
| தன் | = | முக்தியின் தன்மை உணர்தல் |

பக்தி, ஞானம், வைராக்கியம் முக்தியின் தன்மை, இவைகளைக் கொண்டு பரதத்துவத்தை உணர்ந்தவனே பாகவதன் ஆவான்.

தொகுத்தவர் : அம்புஜம் முராரி - சேலம்.

கப் பிறங்கி நிறநலை விளக்கு வதே திருக்கார்த்திகை நன்னா ளாகும். கார்த்திகை நக்ஷத்தி ரம் அக்னியை அதி தேவதை யாக உடையது. அதனால் அதனை "எரி" என்று பரி பாடலும் "ஆழல்" என்று புற நானூறும் கூறுகின்றன. வரா ஹமிஹிரர் காலத்திற்கு முன்பு கார்த்திகை நக்ஷத்திரம் முதலா கக்கொண்டே நட்சத்திரங்கள் கணக்கிடப்பட்டு வந்தன என் பதை மணிமேகலை மூலம் அறி யலாம். புத்தர் பிரான் தோன் றிய விசாக நாளை அசு வினி முதலாகக் கணக்கிட் டுப் பதினாறுவதாகக் குறிப் பிடாமல், 27 நக்ஷத்திரங்களுள் முன்னுள்ள 13க்கும், பின்னுள்ள 13க்கும் இடைப்பட்ட 14ஆம் நாள் என விசாகத்தைக் குறிப் பிட்டு

"இருதிள வேனில் எரிகதிர் இயத்து
ஒரு பதின்மேலும் ஒரு மூன்று
சென்ற பின்
மீனத் திடைநிலை மீனத்து
அசுவயின்
போதித் தலை வனொடு பொருந்தித்
தோன்றும்"

எனக் கூறுகிறது மணிமேகலை!

நக்ஷத்திர ஹோமம் செய்யும் போது கார்த்திகை நக்ஷத்திரத் திற்கே முதலில் ஆகுதி செய் யப்படுகிறது.

கார் நாற்பது என்னும் பழைய நூல் கூறும் செய்யுள் இதோ!

"நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட
தலைநாள் விளக்கில் தகையுடைய
வாகிப்
புலமெலாம் பூத்தன தோன்றி;
சிலமொழி
தூதொடு வந்த மழை"

இப்பாடலில் மதுரைக் கண் ணன் கூத்தனார் கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நாளை "தலைநாள்" என்றும், "நலமிகு கார்த்திகை" எனவும் பாடியுள் ளமை உணரத் தக்கது.

சூரபன்மன் போன்ற அசுரர் களை ஒடுக்கவும், தேவர்களைக் காக்கவும் கருணைகூர் முகங் கள் ஆறும், கரங்கள் பன்னிரண் டும் கொண்டு முருகப்பெருமாள் தோன்றியருளினான்.

சரவணப் பொய்கையில் ஆறு குழந்தைகளாக வடிவம் கொண்டு விளையாடிய குழந் தைகளுக்கு கார்த்திகைப் பெண் கள் பாலூட்டி வளர்த்த னர். கார்த்திகை பெண் களால் வளர்க்கப் பெற்றமை யால் முருகன் கார்த்திகேயன் ஆனான். மேலும் கார்த் திகை நாளில் தன்னை வழிப டுவோர்க்கு எல்லா நலன்களை யும் அளித்தருளவும் இசைந்து அக்கார்த்திகை பெண்களுக்கு முருகன் வரம் தந்தருளினான். அன்று முதல் திருக்கார்த்திகை நாள் முருகனை வேண்டும் விரத நாளாகவும் மாறியது.

கிருத்திகை நோன்பினை முறையாகப் பன் னிரண்டு ஆண்டுகள் நோற்று நாரத முனிவர், சப்தரிஷிகள் எனப் போற்றப்படும் முனிவர் களுக்கு மேலான நிலையைப் பெற்றார்.

அந்தணன் ஒருவன் கிருத் திகை விரதம் கடைப்பிடித்துத் தான் விரும்பிய நலன்களை யெல்லாம் பெற்று திரிசங்கு சக் கரவர்த்தியாகப் பிறந்து பெரும் பேறுகள் எய்தியமையாக கந்த புராணம் கூறுகிறது. மகரிஷி ஸ்ரீ ரமணர் தீபதர்சனத் தத் துவத்தை இவ்வாறு விளக்குகி றார். இவ்வுடலே நான் என்னும்

## புலஹர்

பிரம்மாவின் மானசபுத்திரர் பிரம்மாவின் வேள்வியில் நீண்ட கேசத்தினின்று பிறந்தவர். இவர் சத்தியலோகத்தில் பிரம்ம சபையில் சென்று அமர்வார். மேலேழு உலகங்களில் நான்காம் உலகமாகிய மஹாலோகம் இவர் இருப்பிடம். பூலோகத்தில் இவரது ஆஸ்ரமம் ஹரிக்ஷேத்ரம் என்ற இடத்தில் உள்ளது. இந்த ஆஸ்ரமத்தில் 'பரதன்' வந்து தங்கி தவம் புரிந்ததுண்டு.

தக்ஷனின் மகளாகிய க்ஷமையை இவர் மணந்தார். க்ஷமை என்றால் பொறுமை என்று பொருள். தக்ஷன் செய்த பெரிய யாகங்களுக்கு இவர் அழைப்பு விடுக்கப்பட்டு வருகை புரிந்தார். இவரது பிள்ளைகள் கர்த்தமன், அர்வரீவான், சகிஷ்ணு முதலியோர்.

அதிதியின் மகனான வருணனுக்கும் ஊர்வசிக்கும் அகஸ்தியர் பிறந்து முன்னோர்களை முக்திக்கு அனுப்பும் பொருட்டு அகஸ்தியர் லோபா முத்திரையை திருமணம் செய்து வம்சத்தில் புலஹர் மீண்டும் ஒருமுறை பிறந்தார். புலஹ கோத்திரம் என்பது உண்டானது.

தொகுத்தவர் : ஆர். ராஜலக்ஷ்மி - திருச்சி.

அறியாமையை நீக்கி, அறிவால் இதயத்தில் அகநோக்கில் அத்துவித மெய்ச் சுடரைக் காண்பதே தீபதரிசனத் தத்துவம். இதையே திருவண்ணுமலைச் சுடர் காட்டுகிறது" என்கிறார்.

"இத் தனுவே நானாம் எனும்
மதியை நீத்து அப்
புத்தி இதயத்தே பொருத்தி
அக நோக்கால்
அத்து விதமா மெய்யகச்
சுடர்காண் கை; பூ
மத்தியெனும் அண்ணு மலைச்
சுடர்கான் மெய்யே

என்பது ரமணர் வாக்கு.

கங்கையணி தீபம் கற்பூர
தீபம் மலை
மங்கை யொரு பங்கில் வளர் தீபம்-
பங்கயன் மால்
விண் பாரு நேடும் வண மேவிய
அண்ணுமலையில்
பண்பாருங் கார்த்திகை தீபம்.

தீபத்தின் பெருமையைக் கார்த்திகை வெண்பா இவ்வாறு புகழ்கிறது.

இறைவன் ஒளி வடிவினன் என்பதைக் குறிக்கவே திருக்கோவிலில் திருவிளக்குகள் அமைத்து வணங்குகின்றோம்.

கோவில்களில் நந்தா விளக்குகள் எப்பொழுதும் எரிந்திட மன்னர்கள் வழங்கிய கொடைகளைக் கல்வெட்டுகள் பறைசாற்றுகின்றன.

திருக்கோயில்களில் இறைவன் முன் திருவிளக்கு ஏற்றுவதன் பயனைத் திருநாவுக்கரசர் பின்வருமாறு விளக்குகின்றார்.

"விளக்கினார் பெற்ற பேறு
மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கில் நன்மலர் தொடுத்தால்
தூயவின் ஏறல் ஆகும்;
விளக்கிட்டார் பேறு சொல்லின்
மெய்ந்நெறி ஞானம் ஆகும்
அளப்பில கீதம் சொன்னார்க்கு
அடிகள் தாம் அருளுமாறே"

இப்பாடல் மூலம் கோவிலில் திருவிளக்கு இடுவோர்கள் வீடுபேற்றிற்குரிய மெய்நெறியாகிய ஞான நலத்தினைப் பெறுவர் என்பதை உணரலாம்.

முற்பிறவியில் ஓர் எலியாக இருந்து திருமறைக்காடு என்னும் வேதாரணியம் கோயிலில் திருவிளக்கில் இருந்த நெய்யை உண்ணச் சென்று, தன்னை அறியாமலேயே அத் திருவிளக்கில் இருந்த திரியினைத் தூண்டி நன்றாகச் சுடர்விட்டு எரியுமாறு செய்ததன் பயனாய் மறு பிறப்பில் அவ்வெலி மகாபலிச் சக்கரவர்த்தியாகப் பிறந்தது என்பதைத் தேவாரம் கூறுகிறது.

நிறைமறைக் காடு தன்னில்
நீண்டெரி தீபம் தன்னைக்
கறை நிறத்து எலி தன் மூக்குச்
சுட்டிடக் கனன்று தூண்ட
அரைகடல் மண்ணும் விண்ணும்
அகன்ற வான் உலகும் எல்லாம்
குறைவறக் கொடுப்பார் போலும்
குறுக்கை வீரட்டனாரே
[அப்பர் தேவாரம்]

உடம்பாகிய வீட்டில் உள்ளத்தை விளக்காக்கி உணர்வாகிய நெய்விட்டு, உயிரைத் திரியாக்கி, ஞானத்தீயால் ஏற்றி நோக்கினால் இறைவன் திருவடிகளைக் காணலாம் என்கிறார் நாவுக்கரசர்.

உடம்பெனும் மனையக்த்துள் உள்ளமே
தகளியாக
மடம்படு உணர் நெய்கட்டி உயிர்
எனும் திரிமயக்கி
இடம்படு ஞானத் தீயால் எரி கொள்
இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை சுழலடி
காணலாமே

இறைவனை ஒவ்வொரு பௌர்ணமி நாளிலும் ஒவ்வொரு வகையில் வழிபடுதல் நம் மரபு; எரி எனப்படும் கார்த்திகைப் பௌர்ணமி நாளில் தீபார்ச்சனை செய்து வழிபடல் வேண்டும் என நம் சமயம் கூறுகிறது.

கார்த்திகைத் திருநாளில் ஒளி வடிவாகத் திகழும் இறைவனை உலகுயிர்கள் எல்லாம் இடர் தீர்ந்து நலம் பெறும் பொருட்டு மன மெய் மொழிகளால் வணங்கி வழிபட்டு மகிழ்வோமாக!

விளக்கினை ஏற்றி வெளியை அறிமின்
விளக்கினின் முன்னே வேதனை
மாறும்
விளக்கை விளக்கும்
விளக்குடையார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே!
-(திருமூலர்)

## நரகங்கள்

பாவஞ் செய்தவர்களுக்கு காலதேவனால் நிச்சயிக்கப் பட்ட தீவாய் நகரங்கள் ஆயிரம், பதினாயிரம் அல்ல; எண்பத்து நான்கு லட்சமிருக்கின்றன. அவற்றில், தாமிஸ்ரம், சௌகசம், திரௌஞ்சம், மஹாபைரவம், சான்மலி, ரௌவம், குட்மலம், பூதி, மிருதகம், காலசூத்திரம், சம்ரணம், மகாநரகம், கோகளம், சஞ்ஜீவனம், மகாபதம், ஆவித்தியம், அந்த தாமிஸ்ரம், கும்பீபாகம், அசிபத்திரவனம் ஆக இருபத்தி எட்டு நரகங்கள் மிகக் கொடியனவாகும் என்று கருட புராணம் கூறுகின்றது.

தகவல் :
திரு. N.C. கோபாலன்-சென்னை.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## பக்தி யோகம்

உமைப்ரியன்

பகவான் சொன்னது :

அதைததப்யசக்தோ அஸி கர்தும்
கர்தும் மத்யோக மாச்ரித:।
ஸர்வகர்ம பலத்யாகம் தத:
குரு யதாத்மவான் ॥ (11)

"பிறகு, இதனைக்கூட செய்ய முடியாவிட்டால் என்னிடம் சரணம் புகுவதற்குரியவனாய், தன்னடக்கம் கொண்டு, வினைப்பயன் யாவற்றையும் எனக்கு அர்ப்பணித்திடுவாயாக."

[இறைவன் பக்தன்பால் கொண்ட கருணையினால் அவன் மேன்மைக்காக பல சலுகைகளைத் தருகின்றான். உலகாயுத விஷயங்களில் பற்றுள்ள, அல்லது அப்பற்றுக்களை விடமுடியாத நிலையில் - சூழ்நிலைக்கைதியாகிவிட்ட நிலையில் பக்தன் இறை நினைப்புடன் இருக்கமுடியாவிட்டாலும், இறைவனுக்காக வினைபுரியாவிட்டாலும் குறைந்தபட்சம் தான்தன்னுடைய மகிழ்ச்சிக்காக வினைகள் புரியும்போது, ஒரு சில வினைகளையாவது அவற்றின் பயனை யாவது 'இறைவன் ஆணையால் நான் செய்கின்றேன். அவற்றின் பயன் இறைவனுக்குரியது' என்ற எண்ணமானது மனிதனின் மனதில் அவ்வப்போது தோன்றினாலேயே, அந்த பயிற்சியே நாளடைவில் அவனை முழுமையாய் இறைச் சிந்தனையில் மூழ்க வைக்கும். இதனைத்தான் இறைவன் தன் பக்தனிடம் எதிர்பார்க்கின்றான்.]

ச்ரேயோ ஹி ஞானமப்யாஸாத்
ஞானாத் த்யானம் விசிஷ்யதே ஸ
த்யானாத் கர்மபலத்யாகஸ்த் யாகாச்
சாந்திரனந்தரம் ॥ (12)

"பயிற்சியைவிட ஞானமே சிறந்தது. அந்த ஞானத்தை விட தியானம் மேன்மையானது. அந்த தியானத்தை விட வினைப்பயனைத் தியாகம் செய்வது மிக உயர்ந்தது. அந்த தியானத்திலிருந்துதான் விரைவில் சாந்தியைப் பெறலாம்."

[பேருந்து ஒன்றினை ஓட்டுநர் ஒருவர் செலுத்திக் கொண்டிருக்கிறார். எங்கு நிறுத்த வேண்டுமோ, விரைவாகச் செலுத்த வேண்டுமோ, திருப்ப வேண்டமோ அதற்குத் தகுந்தவாறு அதற்குரிய கருவிகளைப் பயன்படுத்துகிறார். இதனை பயிற்சியினால் அவர் செயல்படுத்துகிறார். போகும்போது பேருந்து நின்று விடுகிறது. எதற்கு நின்றுவிட்டது என்பது ஓட்டுநர்க்குப் புரியவில்லை. அங்கு இயந்திரம் பற்றிய அறிவு அவர்க்கு இல்லை. இந்த அறிவு இருந்தாலொழிய, ஓட்டுநரால் எவ்விதப் பிரச்சனையும் இன்றி பேருந்தினைச் செலுத்தமுடியும். ஆகவே வெறும் பயிற்சியினை விட அறிவு மேலாக விளங்குகிறது. இறைவனைப்பற்றிய அறிவே ஞானமாகிறது. அதாவது இறையுண்மையை அறிவதே ஞானமாகும். அந்த ஞானத்தோடு எல்லா உயிர்களிடத்தும் இறைவனைத் தியானிப்பது சிறந்ததாகக் கருதப்படுகிறது. இவ்வாறு தியானிக்கும்போது செய்யும் வினைப் பயன்களைத் தனக்காக பயன்படுத்துவன விடுத்து, அவ் வினைப்பயன் யாவற்றையும் அவ் இறைவனுக்காகவே அர்ப்பணித்து விடுவது மனிதனைப் பக்குவப்படுத்துவதற்கு வழிவகுக்கும். ஆகவே 'வினைப் பயன் தியாகம்' உயர்ந்ததாக விளங்குகிறது. இதனால் பற்றற்ற மனப்பான்மையும், அதனால் மனயமைதியும் தானாகவே ஒருவனுக்குக் கிடைத்து விடுகிறது.]

அத் வேஷ்டா ஸர்வபூதானாம்
மைத்ர: கருண ஏவ ச ।
நிர்மமோ நிரஹங்கார:
ஸமது: கஸுக: க்ஷமீ ॥ (13)

ஸந்துஷ்ட: ஸததம் யோகி
யதாத்மா த்ருடநிஸ்சய: ।
மய்யர் பிதமனோ புத்திர்யோ மத்பக்த:
ஸமே ப்ரிய: ॥ (14)

"எல்லா உயிர்களிடத்தும் எவ்வித வெறுப்பும் காட்டாது, (அவற்றினிடத்தே) இரக்கமும், நட்பும் காட்டி, மமகாரம் மற்றும் அகங்காரம் விடுத்து, இன்ப துன்பங்களைச் சமமாக எண்ணி, பொறுமை காத்து என்றும் மகிழ்ச்சியாக இருப்பவன், யோகியாக, தன்னடக்கம் கொண்டவனாக, மன உறுதி படைத்தவனாக, என்னிடத்து தனது அறிவு, மனதை முழுமையாக ஒப் படைத்தவனாக, (இறுதியாக) என்னுடைய தீவிர பக்தனாக

யார் இருக்கிறார்களோ அவர்களே எனக்குப் பிடித்தவர்களாக விளங்குவார்கள்."

[மனிதன் உணர்ச்சி பூர்வமானவன். தன் உணர்வுகளை அடக்கி, அவனைப் பண்படுத்துவதன் மூலம் அவனை உய்விக்க பகவான் பலவாறு, வாய்ப்பு கிட்டும் போதெல்லாம் கீதையில் உபதேசிக்கின்றான். ஒரு மரமானது அவன், இவன் என்று வேற்றுமை பாராட்டாது நிழல் தருகின்றது. அந்த மரத்தைவிட மேலான மனிதன் அம்மரம் காட்டுகின்ற பாடத்தை கற்கவேண்டிய நிலையில் இன்றைய மனிதன் திகழ்கின்றான். ஆகவே மற்ற உயிர்களிடத்து வெறுப்பு காட்டாது இருந்தால் அதுவே அவனை ஒரு மனிதனாக விளங்கச் செய்யும். அந்த வெறுப்பற்ற நிலையே மற்ற மனிதர்களிடம் மட்டுமின்றி மற்றைய உயிர்களிடத்தும் இரக்கமும், நட்பும் பாராட்ட வழிவகுக்கும். 'தான்' என்ற அகங்காரம், 'எனது' என்ற மமகாரம் ஒழிந்தால், 'எல்லாம் அவ் இறைவன்'. 'எங்கும் அவ் இறைவன்' எனும் உயர் உணர்வு தோன்றிடும். எங்கும் இறைவனைப் பார்த்திடும் போது தன்னலம் மறைந்து பொதுநலம் வந்திடும் போது, துன்பத்தையும் இன்பமாகக் கருதிடும் மனப்பக்குவம் பெற்று விடுகிறான். அப்போது பற்றற்ற துறவிநிலையினை மனம், உடல் பெற்று விடுகின்றன. அந்த நிலையில் மனிதன் சந்தோஷத்தையே நாளும் பெறுகின்றான். உடல், உள்ள அடக்கம் அவனிடம் தானாகவே வந்தமைகின்றன. அந்த அடக்கத்தின் காரணமாக மனம் மற்றும் அறிவு, உறுதியான எண்ணங்களை முடிவுகளை முறையே எடுக்கின்றன. அந்த முடிவுகளை பக்தன் என்ற நிலையில் விளங்கி, இறைவனுக்கும் சமர்ப்பித்து விடுகின்றான் இந்த நிலையை ஒரு பக்தன் அடைந்து விட்டானாகில் அவனே இறைவனுக்கு நெருங்கிய அன்பனாகி விடுகின்றான்.]




**யஸ்மான்னோத் விஜதே லோகோ**
**லோகான்னோத் விஜதே ச ய: ।**
**ஹர்ஷாமர்ஷ பயோத்வேகைர் முக்தோ**
**ய: ஸ ச மே ப்ரிய: ॥ (15)**

"யாரால் இந்த உலகிற்குத் துன்பம் இல்லையோ. இந்த உலகத்தால் யார் துன்பம் கொள்வதில்லையோ, மேலும் மகிழ்ச்சி, கோபம், பயம், கலக்கம் ஆகியவற்றிலிருந்து யார் ஒருவன் தனித்து இருக்கின்றானோ, அவர்களே எனக்குப் பிடித்தமானவர்கள்."

[ஒழுக்கம், அடக்கம், நேர்மை, அன்பு, இரக்கம், பொதுநலம் போன்ற உணர்வுகளைக் கொண்ட மனிதனால் இந்த உலகத்திற்கோ (மற்றைய உயிர்களுக்கோ) அல்லது இந்த உலகத்தால் அவனுக்கோ எவ்விதப் பாதிப்போ, துன்பமோ, இடையூறுகளோ, பிரச்சனைகளோ இருக்காது. அத்தகு மனிதன் தெய்வ நிலைக்கு ஒப்பாகின்றான். மகிழ்ச்சி அல்லது களிப்பு எனும் உணர்வை மனிதன் தான் எதிர்பார்த்தது தனக்குக் கிட்டும்போது அடைகின்றான். ஏமாற்றங்களுக்கு உள்ளாகும்போது அதே

மனம் துன்பத்திற்கு உள்ளாகிறது. கோபம், பொறாமை, வன்முறை போன்ற தீக்குணங்கள் உருவாக வழி வகுக்கின்றன. ஆகவே இன்பத்தையும், துன்பத்தையும், வெற்றியையும், தோல்வியையும் சமமாகப் பாவிக்கும் மனமே ஒருவனை உயர்த்தும். மனிதனை எந்த நிலைக்கும் தாழ்த்துவன கோபமும், அச்சமும். கோபம் மனிதாபிமானத்தை மறைக்கும். அச்சம் மனிதனை நாளும் மரணக்குழியில் வீழ்த்தும். கோபமும், அச்சமும் ஒருவனுடைய மனத்தை பலவீனமாக்கும். எவ்வாறு கலங்கிய நீரில் உருவம் தெரியாதோ அவ்வாறே கலங்கிய மனதில், அறிவில் ஒரு முடிவோ, ஒரு நிலையோ காணமுடியாது. அதாவது உணர்ந்த இறை உணமையை அவன் ஆத்மாவில் காண முடியாது. ஜீவாத்மா பரமாத்மாவை கண்டவுடன், இரண்டும் ஒன்றுகிவிடுகின்றன. இதனைத் தான் அவ் இறைவன் பக்தனிடம் எதிர்பார்க்கின்ருன்.]

அனபேக்ஷ: சுசிர்தக்ஷ உதாஸீனோ
கதவ்யத: ।
ஸர்வாரம்ப பரித்யாகீ யோ மத்பக்த:
ஸ மே ப்ரிய: ॥ (16)

"ஆசையற்றவனாய், தூயமை உடையவனாய், திறமை கொண்டவனாய், நடுவு நிலைமை கொண்டாடுபவனாய், துயரம் அற்றவனாய், உலகாயுத வினைகளை மேற்கொள்ளாதவனாய், என்மீது பக்தி கொண்டவனாய் யார் விளங்குகிருர்களோ அவர்களே எனக்குப் பிடித்தமானவர்கள்."

['போதும்' என்ற மனமே ஆசைக்கு அணை போடுகின்றது. இந்த ஆசை அறவே போகவேண்டுமென்ருல், 'வேண்டாம்' என்ற மனம் தேவை. ஆசை அறவே அற்றுவிடும் போது, ஆசை விளையும் பூமியான மனம் தூய்மை அடைகின்றது. தூய்மையான மனமும், உயர்ந்ததான அறிவும் சேரும் போது, திறமை தானாகவே வந்தமைகின்றது. இந்தத் திறமையால் ஓரம் சாராத அதாவது நடுவு நிலைமை வழுவாத குணம் ஒருவனிடம் வந்து சேருகின்றது. இதனால் உற்ருர் உறவினர், நண்பர என்ற உறவுகளின் பால் மனம் பேதலிக்காது, மனம் அமைதி அடைகின்றது. இதன் விளைவாக துன்பம் அவனை நாடுவதில்லை. மேலும் செய்யும் செயல்களைத் தனக்காக கொள்ளாது, பற்றற்ற நிலையில் செயல்படுத்துகின்ருன். இதனால் எவரிடத்தும் இறைவனிடத்தும்கூட அவன் எதனையும் எதிர்பார்ப்பதில்லை. அந்த நிலையில் இருக்கும் பக்தனையே இறைவன் விரும்புகின்ருன்.]

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி
ந சோசதி ந காங்க்ஷதி ।
சுபாசுப பரித்யாகீ பக்திமான்ய:
ஸ மே ப்ரிய: ॥ (17)

"மகிழ்ச்சி, வெறுப்பு, துன்பம், ஆசைபடுதல் ஆகியன இல்லாதவனாய், நன்மை தீமைகளை எதிர்பார்க்காதவனாய் இருக்கும் பக்தனே எனக்கு மிகவும் பிடித்தவனாவான்."

[மகிழ்ச்சி ஏற்படும்போது அந்த உணர்விலேயே மூழ்கி விடுவதோ, துன்பம் வந்திடும் போது வாழ்வே முடிந்துவிட்டாற்போன்று துவண்டு விடுவதோ மனிதனை நெறிபடுத்தாது. தானாக வந்தாலும், எதிர்பார்த்து வந்தாலும் இன்ப துன்ப உணர்வுகளுக்கு அடிமையாகாத மனிதனே இறை உணர்வை பெற முடியும். ஆசையே அனைத்திற்கும் வித்து. அந்த விதை மனிதனைப் பொறுத்தவரை புற்றுநோய் போன்றது. நோயின் கொடுமை வெளியே காண முடியாது. மனிதனை உருக்குலைத்திடும் நோய் புற்றுநோய். அதே போன்று ஆசையின் பிறப்பு, மனிதனின் சிறப்புக்கு வழிவகுத்திடும். அதே ஆசையினை இறைநாட்டத்தின்கண் திருப்பினால் அந்த ஆசை புனிதமாகின்றது. அது மற்றைய ஆசைகளுக்கு இடம் தருவதில்லை. மனிதன் தனக்கு இன்பம் வந்திடும்போது உலகத்தையே உறவாடுவதும், துன்பம் தாக்கிடும்போது உலகத்தையே அழிக்க நினைப்பதும் மனிதனின் பலவீனம். இன்பமும் துன்பமும் தன் உடலுக்கேயன்றி, தன் ஆத்மாவுக்கு அல்ல என்ற உயர் பக்குவம் வந்திடும்போது இன்பமும் துன்பமும் அவனுக்கு ஓர் உணர்வாக அமைவதில்லை. இந்த முதிர்ந்த நிலையில் உள்ள மனிதனே இறையருளை பெறமுடியும்.]

ஸம: சத்ரௌ ச மித்ரே ச ததா
மானா பமான யோ: ।
சிதோஷ்ண ஸுகது:கேஷு ஸம:
ஸங்கவிவர்ஜித: ॥ (18)

"பகைவனையும், நண்பனையும், மானத்தையும் அவமானத்தையும் ஒன்றுகக் கருதுபவனும், குளிர், வெப்பம் மற்றும் இன்பம் துன்பம் ஆகியவற்றை ஒப்பாகப் பார்ப்பவனும்."

துல்யநிந்தாஸ்துதிர்மௌனீ
ஸந்துஷ்டோயென கேனசித் ।
அநிகேத: ஸ்திரமதிர் பக்திமான்
மே ப்ரியோ நர: ॥ (19)

"இகழ்பவனையும், புகழ்பவர்களையும் ஒன்ருகக்கண்டு (அல்லது கேட்டு) மௌனம் கடைப்பிடிப்பவனும் கிடைப்பதைக் கொண்டு மனநிறைவு கொள்பவனும் தனக்கென்ற ஓர் இருப்பிடம் இல்லாதவனும், மன உறுதி கொண்டவனும் ஆகிய பக்திமானே (மனிதனே) எனக்கு மிகப்பிடித்தமானவனாவான்."

[மனிதனின் தன்னலமே அவனுள் பகைமையை, நட்பினைப் பாராட்ட வழிவகுக்கின்றது. வேண்டுபவன், வேண்டாதவன் என்ற வேற்றுமை உணர்வில் பகைமை, நட்பு உணர்வுகள் மனிதனிடம் ஏற்படுகின்றன. எல்லா உயிர்களும் இறைவனின் படைப்பே, எல்லா உயிர்களிடத்தும் இறைவன் வாழ்கின்ருன் என்ற உணர்வே பகைவனையும், நண்பராக்கும். 'தான்', 'தனது' என்ற அகப்பற்று, புறப்பற்று உணர்வுகளே, 'தேகம் அழியக் கூடியது', 'ஆத்மா அழிவில்லாதது' என்ற உண்மையை மறந்த உணர்வே மனிதருள் மான, அவமான உணர்வுகளை தோற்றுவிக்கின்றன. இந்த மான, அவமான நிகழ்ச்சி உணர்வுகளால் ஏற்படும் இன்பம் துன்பங்கள் மனிதனைத் தாக்குகின்றன. மனிதருள் பற்று, ஆசை இருக்குமிடத்து, வளருமிடத்து துன்பங்கள் தொடரும், மனிதனை அலைக்கழிக்கும். மனிதன் மிகச்சாதாரணமாக மிக எளிதாக பிறர் புகழ்ச்சிக்கு அடிமையாகின்ருன். அதே போன்று பிறர் இகழ்வதால் மிருக உணர்வுகளுக்கு இலக்காகின்ருன். இப்புகழ்ச்சி, இகழ்ச்சியால் மனிதன் தன்னை மறக்கின்ருன். புகழப்படும் ஒருவன் காலத்தால் மறக்கப்படுகின்ருன். இகழப்படும் ஒருவன் விரைவில் தன்னையே இழக்கின்ருன். புகழ்ச்சி, இகழ்ச்சி யாவும் அழியும் இந்த உடலுக்கு என்ற உயர் உண்மையை மனிதன் என்று அறிகின்ருனோ அன்றே ஒரு மௌனி ஆகின்ருன். அந்நாளே அவன் இறைவனை அறிய முதலடி வைக்கின்ருன் என்று பொருள். மனிதன் தன் குழந்தை நிலையிலிருந்தே 'வேண்டும் வேண்டும்' என்று அலைகின்ருன். அடுத்தவனைப் பார்த்து, தன் தேவைகளை அதிகரித்துக்கொள்கின்ருன். தன் சக்தியை, தன் தகுதியைமீறி தன் தேவைகளை அடையத் துடிக்கின்ருன். மரணமே அவன் தேவைகளுக்கும் முற்றுப்புள்ளி வைக்கின்றது. மனத் திருப்தி, உடல் திருப்தி உடையவனே ஒரு நல்ல மனிதனாகத் திகழ வாய்ப்புள்ளது.

மிருகம் அடுத்த வேளை தீனியைப் பற்றி எண்ணிப்பார்ப்பதில்லை. மனிதன் தான் நாளை உயிருடன் இருப்போமா என்ற ஒரு உண்மைநிலை தெரியாமல் அல்லது தெரிந்தும் அதனைப் பற்றி சிந்தையில் கொள்ளாமல் நாளைய தேவைகளுக்காக நாளும் பேயாய் பொருள், பதவி, குடும்பம் என்று ஆலாய்ப் பறக்கின்ருன். இறந்துவிட்டால் ஒரு சில நிமிடங்களில் சாம்பலாகிப் போய்விடும் மனிதன் தன் வாழ்நாளில் எட்டடுக்கு மாளிகையில் வாழ ஆசைப்படுகின்ருன். அதற்காக தனக்கும், தன் குடும்பத்தார்க்கும் தன்னால் முடிந்தவரை வீடு, மனை, தோட்டம் என்று வாங்கிக் குவிக்கத் துடிக்கின்ருன். இறந்தவுடன், அவன் அத்தனையும் விட்டு ஊருக்கே வெளியே (காசு கொடுத்து) எரிக்கப்படுகின்ருன். இதுதான் வாழ்க்கை. இதனை உணர்ந்தவன் இறைவனுக்கு நெருக்கமாகின்ருன். ஆசைகள் தோன்றுமிடத்து துன்பங்கள் தாக்குமிடத்து, மன உறுதியுடன் இறை நாட்டம் கொண்டவன் சிறந்த பக்தனாகின்ருன்.]

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

(தொடரும்)

## "அஷ்டமச் சனி"

ஒவ்வொருவருடைய சாதகத்தில் வருகின்ற எட்டாமிடத்துச் சனி மட்டும் அஷ்டமச் சனி ஆகாது. எட்டாமிடத்துச் சனியாக ஔவையார் மூவரைக் குறிப்பிடுகிறார். இதோ பாடல்.

"காலையில் பல்கலைநூல்
கல்லா தலைமகனும்
ஆலையெரி போன்ற
அயலானும் - சால
மனைக்கட் டழிக்கு
மனையாளும் இம்மூவர்
தனக்கட் டமத்துச் சனி"

### கருத்து

"படிக்காத மூத்தமகனும், அருகிலே உள்ள பகைவனும், வரவுக்கு மீறி செலவு செய்யும் மனைவியும் அட்டமத்துச் சனியாகும் என்பது ஔவையார் வாக்கு."

## பன்னிரண்டு

1. ஆழ்வார்கள்
2. திருமண் இடும் இடங்கள்
3. உயிர் எழுத்துக்கள்
4. அகத்தியரின் மாணவர்கள்
5. ஏசுநாதரின் சீடர்கள்
6. அந்தணரின் அறம்
7. சிவஞான போதம் (சூத்திரங்கள்)
8. மாதங்கள்
9. இராசிகள்

# தீபாவளி

திருமதி. உமா ஹரிஹரன் - ஆலப்புழை.

அஞ்ஞானமாகிய இருளை விளக்கி, ஞானமாகிய ஒளி பிரகாசிக்க வேண்டும். தீப ஆவளி - தீப வரிசை. எந்த ஒரு நிகழ்ச்சியும் தீபம் ஏற்றியே நடக்கிறது. மனிதனுடைய வாழ்வில் தீபத்திற்கு தனி இடம் உள்ளது. இருளிலிருந்து ஒளிக்கு அழைத்து செல்லும் நாளே தீபாவளி ஆகும். இந்தியா முழுவதும் அனைத்து மதத்தவரும் கொண்டாடப்படும் பண்டிகையே தீபாவளி.

அஸ்ஸாமில் பிராக் ஜோதிக்ஷபுரம் என்ற இடத்தில் நரகாசுரன் என்பவன் இருந்தான். இவன் தவம் செய்து பல வரம் பெற்ருன். வரத்தின் பலத்தால் எல்லோரையும் வென்ருன். "தான்" என்ற கர்வம் கொண்டு பெண்களையும் கந்தர்வர்களையும் துன்பப்படுத்தினான். இவன் தொல்லை அதிகரித்ததால், பகவானே அவதாரம் செய்கிருர், அவனை ஸம்ஹாரம் செய்ய.

வராக அவதாரத்தில் மகாவிஷ்ணு, பூமா தேவிக்கு பிறந்தவனே இந்த நரகாசுரன். பிறகு கிருஷ்ணவதாரத்தில், நரகாசுரனை அழிக்க கிருஷ்ண பகவான் சத்திய பாமாவுடன் வருகிருர். தாயாகிய சத்திய பாமாவின் கைகளாலே மடிகிருன் நரகாசுரன். லோக சங்கிரகம் என்று வந்துவிட்டதால், தன் புத்திர பாசத்தையும் துறந்து, தன் கண்கள் முன்னால் தன் கைகளினாலே, தன் மகன் இறப்பதை பார்க்கிருள். பௌமன் என்று பெயர் வைத்து, எந்த இரு கைகளால் வாரி, முத்திமிட்டு கொஞ்சி மகிழ்ந்தாளோ, எந்த மகன் நான்கு பேர் வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டாளோ அந்த மகன் தன் கைகளாலே கொல்லப்பட்டு "அம்மா" என்று சொல்லிக்கொண்டே தாயின் மடியில் மடிவதைக் கண்டு கண்ணீர் விட்டாலும் உலக நன்மைக்காக தாங்கிக் கொள்கிருள், அந்த பொறுமைக்கே பிறந்த பூமா தேவி.

அவன் சாகும்போதாவது பகவானை நேரில் பார்க்கும் பாக்கியம் கிடைத்ததே என்று சந்தோஷப்படுகிருள். மகன் இறந்த துக்கத்திலும் மற்றவர்கள் துன்பம் மறைந்ததே என்று சந்தோஷப்படுகிருள் அந்தத் தாய். எந்தத் தாய்க்கும் தோன்ருத நினைப்பு பூமாதேவிக்கு வந்தது. ஆம்! உலக க்ஷேமத்திற்காக தன் மகன் சாவே சிறந்தது என்று நினைக்கிருள். என் மகன் போனாலும் மற்றவர்கள் இந்த நாளில் எண்ணெய் தேய்த்து, நீராடி, புத்தாடை உடுத்தி, பல்சுவை உணவு சாப்பிட்டு மகிழவேண்டும் என்று வேண்டிக்கொண்டாள் பூமா தேவி. அந்த நாளையே தீபாவளியாக கொண்டாடுகிருேம்.

நான் துன்பப்பட்டாலும் மற்றவர்கள் சந்தோஷமாக வாழ வேண்டும் என்று நினைக்க வேண்டும் என்பதை உணர்த்துவதே தீபாவளி பண்டிகை. பூமாதேவி இறைவனிடம் வரம் வேண்டினாள். "ஸ்வாமீ, மக்கள் அருணோதய காலத்தில் தலையில் எண்ணெய் வைத்து, வெந்நீரில் ஸ்நானம் செய்ய வேண்டும். இன்று புத்தாடை உடுத்தி, விருந்து உண்டு, பட்டாசுகள் வெடித்து மகிழ வேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள்.

தீபாவளி அன்று எண்ணெய்யில் லக்ஷ்மீ வாசம் செய்கிருள். கங்காதேவீ வெந்நீரில் அன்று வசிக்கிருள். இதனால் தான் தீபாவளி அன்று "கங்கா ஸ்நானம் செய்தாயா?" என்று கேட்கிருேம். இன்று கங்கா ஸ்நானம் செய்பவர்களுக்கு நரக பயமும், நோய்களும் நீங்கும்.

தீபாவளி அன்று மட்டுமே விடியற்காலையில் எண்ணெய் தேய்த்துக் கொள்ளலாம். மற்ற நாட்களில் எல்லாம் சூரிய உதயமான பிறகுதான் எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும். புதிய ஆடைகள் அணியும் பண்டிகையாக பலலாயிரம் ஆண்டுகளாக கொண்டாடப்படும் தீபாவளி, லக்ஷ்மியை வழிபடும் பண்டிகையாக கொண்டாடப்படுகிறது. வீடு முழுவதும் விளக்குகள் ஏற்றி வைத்து லக்ஷ்மி தேவியை வரவேற்பார்கள். சந்திர குப்த விக்ரமாதித்தன் தர்மத்தை நிலை நாட்ட ஐப்பசி மாதம் ஆமாவாசை அன்று ரத்தின சிம்மாசனம் ஏறியதாகவும் சொல்லப்படுகிறது. இன்றுதான் விக்கிரம சகாப்தம் ஆரம்பம். பட்டாசுகள் வெடிக்கிருேம். இது ஒளியையும், ஒலியையும் கொடுக்கி

றது. தபஸ்னாலும் தியானத்தினாலும் பிரகாசத்தை அடைய முடியும் என்பதை விளக்கவே பட்டாசு. ஜீவன் பிரம்மத்தை காண்பதுபோல நெருப்பு தத்துவத்தை முடிவாக காண்கிறது. எப்படியென்றால் ஞானக் கனல் ஏற்படும் போது பட்டாசு வெடிப்பது போல அஞ்ஞானம் அழிந்து ஒழியும் என்பதை நமக்கு விளக்குகிறது. இந்த பட்டாசு வெடிக்கும் பழக்கத்தை முதன்முதலில் தொடங்கியது மொகலாய அரசர் பாபர் என்றும் சொல்லுகின்றனர். இதை "சுயின் இ சுக்பரி" என்ற நூலிலிருந்து அறியலாம்.

மகாபலி சக்கரவர்த்தி தீபாவளி அன்று சிம்மாசனம் ஏறியதாகக் கூறப்படுகிறது. தீபாவளி அன்று ஒளியூட்டப்பெறும் தீபமே "யமதீபம்" என்று வாமன புராணம் கூறுகிறது.

ஆரிய சமாஜததை தோற்றுவித்த தயானந்த சரஸ்வதி தீபாவளி தினத்தில்தான அமரரானார். சீக்கிய மதத்தை நிறுவிய குருநானக் பூதவுடலை விட்டு மறைந்ததும் தீபாவளி அன்றுதான். சநதிர குப்த விக்ரமாதித்தன் தீபாவளி அன்று சிமமாசனம் ஏறியதாகச் சொல்லுவர. ஆதிசங்கரர தீபாவளி அன்று ஞானபீடததை ஏறபடுத்தினார் என்றும சொல்லுகிறார்கள். தீபாவளி பண்டிகையை முதன் முதலில் நரகாசுரனின் மகனான பகதத்தன் கொண்டாடியதாகக் கூறப்படுகிறது. கிருஷ்ண பகவான் வைகுண்டம் அடைந்த நாளே தீபாவளி என்று குஜராத்தியர் சொல்லுகின்றனர். கோவிந்த சிங்க் என்ற சீக்கிய குரு "கல்சா" எனப்படும். சமய அமைப்பை தீபாவளி அன்று உருவாக்கினார்.

தீபாவளி சமயததில மூன்று நாட்களுக்கு தேவீ காசி க்ஷேத்திரததில தஙகி அன்னபூரணியாக தரிசனம் தருகிறாள். வங்க, அஸ்ஸாம் மகாணததில பவானி தேவியாகவும், தமிழ நாட்டில் காவிரியாகவும் தேவீ இந்த நாளில் வழிபடப்படுகிறாள்.

மனிதர்களின் தீய எண்ணங்கள் மறையவும், கணவன மனைவி ஒற்றுமையுடன வாழவும் தீபாவளி கொண்டாடப்படுகிறது.

<u>தினசரி நிகழ்ச்சி நிரல்</u>

## ஸ்ரீகபிலேஸ்வர சுவாமி கோயில், திருப்பதி.

| நேரம் | | நிகழ்ச்சி |
|---|---|---|
| காலை 5-00 முதல் காலை 5-30 வரை | - | சுப்ரபாதம் |
| காலை 5-30 முதல் காலை 7-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை 7-00 முதல் காலை 8-00 வரை | - | அபிஷேகம் (ரூ. 2/- நபர் ஒருவர்க்கு) |
| காலை 8-00 முதல் காலை 8-30 வரை | - | அர்ச்சனை (ரூ. 2/- நபர் ஒருவர்க்கு) |
| காலை 8-30 முதல் காலை 9-00 வரை | - | சுத்தி, முதல் மணி |
| காலை 9-00 முதல் காலை11-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை11-00 முதல் காலை11-15 வரை | - | 2-வது மணி |
| காலை11-15 முதல் மாலை 4-00 வரை | - | **ஸர்வ தரிசனம்** |
| மாலை 4-00 முதல் மாலை 4-30 வரை | - | அபிஷேகம் (ரூ. 2 /- நபர் ஒருவர்க்கு) |
| மாலை 4-30 முதல் மாலை 5-30 வரை | - | ஸஹஸ்ரநாம அர்ச்சனை(ரூ. 2/- நபர் ஒருவர்க்கு) |
| மாலை 5-30 முதல் மாலை 5-45 வரை | - | இரவு கைங்கர்யங்கள் |
| மாலை 5-45 முதல் மாலை 6-15 வரை | - | தீபாராதனை |
| மாலை 6-15 முதல் இரவு 7-15 வரை | - | **ஸர்வ தரிசனம்** |
| இரவு 7-15 முதல் இரவு 7-30 வரை | - | ஏகாந்த சேவை |

**குறிப்பு :**

ஒவ்வொரு திங்கட்கிழமை தோறும்

| நிகழ்ச்சி | | நேரம் |
|---|---|---|
| அபிஷேகம் | - | மாலை2-00 முதல் மாலை 2-30 வரை |
| ஸஹஸ்ரநாம அர்ச்சனை | - | மாலை2-30 முதல் மாலை 3-30 வரை |
| இரவு கைங்கர்யங்கள் | - | மாலை3-30 முதல் மாலை 3-45 வரை |
| தீபாராதனை | - | மாலை3-45 முதல் மாலை 4-15 வரை |
| ஏகாந்த சேவை | - | இரவு 7-15 முதல் இரவு 7-30 வரை |

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

தேக்க - நிறையுமபடி; தேஙக

தேக்கம் - பயம; தடை, ஏப்பம்

தேக்கிட்டபடி - தெகட்டினபடி

தேககிட்டாரககு - அஜீரணமாயிருப்பாரககு

தேஙகவேணடா - தடுமாறவேணடா

தேஙகாதே - ஏங்காமல, தயஙகாமல்

தேசமுடையாய் - ஒளியையுடையாய

தேசவார்ததை - புகழபெறறதான வாரததை; அதாவது இருநதார இருநத இடஙகளிலே தங்களுடைய கொடை முதலான குணங் களைச சொலலிக்கொணடா டுகை

தேசி - நாய்; அழகு; குதிரை

தேசிகர் - தேசததில் உள்ளவர; ஆசார யர, அறிவுடையார

தேசு - மதிப்பு, ஒளி

தேசும் திறனும் - ஒளியும் வீரயமும

தேட்டம - விருபபம்; ஸமபாதிககை

தேதென வென்று - தென்னதென்னவெனகை

தேபபெருமாள் - தேவப்பெருமாள எனறதன கொச்சை

தேம்பணை - தேன விஞசின மருதநிலம

தேம்பல் - மெலிவு; குறைவு

தேம்புகுற - குறைகிற

தேம்புதி - குறையாநினறுய

தேம்பூண் - தேய்கக்கும்படியான; தேயும்படி யான ஊண்; ஆத்மா தேயுமப டியான ஊண- சப்தம, சுவை முதலானவை

தேமல் - சுணங்கு

தேய்ந்தற - விட்டுப்போம்படியாக அறத் தேயநது-மிகவும் குறைந்து

தேய்ப்ப - உரச

தேய்வை - சந்தனக்குழம்பு

தேயு - தீ

தேர்க்கால - வணடி, ரதம்

தேரததுகள - தேர்களால் கிளப்பபபட்ட தூளி

தேர மிகுநது - தேரை நடததி

தேரவன - தேடாநின்றன

தேர்வேன - ஆராயக்கடவேன்

தேரணஙகலகுல- தேரானது வருநதி ஒபபாகா நின்றுள்ள; அலகுல்-நிதம்பம்; இடை. அணங்கு என்று நோவாய் அத்தால் மிகவும் ஒப்பன்று என்றபடி. அதாவது தேரபோல் குறுகின இடை.

தேரரசர - தேர மனனர

தேராவரககர் - இவனை நம்மால் வெல்ல முடியுமா எனறு தேரந்தறிய மாட்டாத அரககர

தேராழி - சககரம்

தேருஙகால - ஆராயுஙகால

தேவகாரியம் - பகவத ஸமாராதனம்

தேவராய நிற்கும் தேவு - சூரியன், இநதிரன, முதலா னோரக்கு நடுவே நிற்கும் நிலை

தேவாரம - திருவாராதனம, வீட்டுபபூஜை யில உளள மூர்த்திக்குப் பெயர.

தேவில் - கோவில

தேவு - தெயவம்; தெயவததன்மை

தேவி மணாளன - பெரிய பிராட்டியாரால் விரும் பபபடுமவன-எமபெருமான்

தேவிமை தகுவார - பட்டததுககு உரியராயிருபப வர

தேவியர - பிரணயிநிகள; மஹிஷிகள்

தேவு மறறறியேன் - மற்றொரு தெய்வத்தை அறி யேன்

தேவை - காரியமாய அடிமை எனறபடி; விதி; மரயாதை; நிர்ப்பந்தம்

தேறறம - தெளிவு; அழகு; நிசசயம்

தேறறன் - தெள்ளியவன

தேறறனமை - தெளிவு

தேற்றறியாள - அறியமுடியாதாள

தேற - தெரியுமபடி

தேறல - மது; தேன்

தேறலமாநதி - தேனை நுகரநது

தேறு ஞானத்தர் - தெளிநத அறிவுடையார

தேருத வணணம - நமபாதபடி

தேறுதல - நம்புதல்; தெளிதல

தேறேனமின் - புத்தி பணணுதே கொள்ளுங் கோள்

தேன் - வணடு, அழகு, குளிர்ச்சி, ரஸம், மது

தேனளவு செறிகூந்தல் - அழகோடு கூடின செறிந்த கூந்தல். அளவு-கூடின

தேனாங்காரப் பொழில் - வண்டுகளின் அபிமானமே யான பொழில்

தேனாடமாடக் கொடி - தேனை உண்ட வணடுகள் மேலே எழப்பறக்க அக்காற் றுலே மாடத்திலுண்டான கொடிகள் அசையும்படி

தேனிடைக் கரும்பு - தேனை நீராக வளர்ந்த கரும்பு
தேனித்திருமின் - உள்ளே கலந்து மகிழ்ச்சியு டன் இருங்கோள்
தேனுகன் - கழுதையாய் வந்த அரக்கன
தேனு - பசு, எருமை, குதிரை

## தை

தைக்கவர் ஷித்து - அழுக்கு முழுவதும் கழியும் படி மழைபெய்து; தைக்க - உறைக்க, உரக்க
தைச்சு - தைத்து, உரைத்து
தைத்ரியன் - தைத்திரிய சாகையின பொருளை அறிந்தவன.
தைத்துச் சொல்-லுகிற - உரைக்கச் சொல்லுகிற
தையலார் - பெண்கள்
தைவந்த தென்றல் - தைவருகை-தடவுகை. தடவிக கொடுக்கும் குளிர்ந்த தென் றல்

## தொ

தொக்க - திரண்ட, நெருங்கி
தொக்கம் - திரள்; நெருக்கம்
தொக்கு - தோல்; பழுத்தோல்; மேல தோல்
தொக்கீண்டி - கூடித்திரண்டு
தொகுதி - திரட்சி
தொகுக்கை - கூட்டுகை
தொகுகை - சேருகை
தொகுநீர - ஜலராசி
தொஙகல - பெருமாளுக்கு கிரீடத்தின் மேல சாத்தும மாலையும் வளையமும
தொஙகுகை - நாலுகை; இருக்கை
தொஙகலாள - மாலையையுடையவள்
தொஙகாதபடி - மிஞசாதபடி; இராதபடி
தொட்ட - தரித்த
தொட்டல் - கைதீணடல; உணடல்
தொட்டான் - ஏவினான
தொட்டு - முதலே தொடஙகி; பிடித்து
தொட்டுத தெல-லாம் - எடுததெலலாம
தொட்டுவிட்டது - ஈடுபடுத்தியது
தொடடாரைத் தொடுகை - பரம்பரையான உறவு
தொட்டுவிடக் கடலேன் - சமபந்தித்து விடக்கடவேன்
தொடக்கருத வன்பு - வேறு விஷயத்தில தொடுதல் இல்லாத; மற்றொன்றில் செல லாத ஆசை
தொடர் - மாலை; வமசபரம்பரை
தொடரிலிட்ட ஈயம் - உருக்கும் குவை
தொடல் - கடல்
தொடி - வளை
தொடுகடல் - தோண்டின கடல; ஸகரர்கள் தோண்டின கடல், ஆழத்தைச் சொல்லுகிறது தொடு

தினசரி நிகழ்ச்சி நிரல்

## ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயில், திருப்பதி.

| | | |
|---|---|---|
| காலை 5-00 முதல் காலை 5-30 வரை | - | சுப்ரபாதம் |
| காலை 5-30 முதல் காலை 7-00 வரை | - | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| காலை 7-00 முதல் காலை 8-00 வரை | - | சுத்தி, தோமாலா சேவை (ஆர்ஜிதம் ரூ. 4/-) |
| காலை 8-00 முதல் காலை 8-30 வரை | - | அர்ச்சனை ஆர்ஜிதம் (ரூ. 4/-) |
| காலை 8-30 முதல் காலை 9-30 வரை | - | முதல் மணி, பலி சாத்துமுறை |
| காலை 9-30 முதல் மதியம் 12-30 வரை | - | ஸர்வ தரிசனம் |
| மதியம் 12-30 முதல் மதியம் 1-00 வரை | - | 2ஆவது மணி |
| மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| மாலை 6-00 முதல் இரவு 7-00 வரை | - | தோமாலா சேவை, பலி, இரவு கைங்கர்யங்கள் |
| இரவு 7-00 முதல் இரவு 8-45 வரை | - | ஸர்வ தரிசனம் |
| இரவு 8-45 முதல் இரவு 9-00 வரை | - | சுத்தி |
| இரவு 9-00 மணிக்கு | - | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம் ரூ. 4/- நபர் ஒருவர்க்கு) |

குறிப்பு : (வெள்ளிக்கிழமைகளில், ஏகாதசி நாகளில், உத்திர நட்சத்திர நாளில் ஸர்வ தரிசனம் காலை 5-30 முதல் காலை 6-30 மணி வரை.)

தொடுகிலோம் - தொடககடவோமலலோம்
தொடுத்த - சேரதத
தொடுப்புண்டாய - களவு செய்து உண்டாய்
தொடுதோல - செருபபு
தொடுவு - களவு
தொடை - தொடர்ச்சி; பூமாலை
தொடைகொண்டேன் - அறிந்தேன்
தொடை கொள்கை - தோன்றுகை; காண்கை
தொண்டக்குலம் - தொண்டர்களின் திரள்
தொண்டர் தொண்டர் - அடியார் அடியார்
தொண்டரடிப் பொடியாழ்வார் - பன்னிரு ஆழ்வார்களில் ஒருவர்
தொண்டாய தொல்சீர் - கைங்கர்ய சம்பத்து
தொண்டை - கோவைப்பழம்; கழுத்து
தொண்டை மன்னவன் - தொண்டமான் சக்கரவர்த்தி
தொத்தற - சம்பந்தமற
தொத்து - பூங்கொத்து, சம்பந்தம்
தொல்கானம் - பழையகாடு
தொல்குருகு - பெரியகுருகு
தொய்யில் - பெண்கள் கொங்கை தோள்களில் எழுதும் கோலம்; அழகு; கிளர்ச்சி
தொல்முனி - தேவாதிகளைப் பற்றப்பழையனாய் மனைசீலனான பிரமன்
தொல்லை நன்னூல் - பழையதான வேதாந்த சாஸ்திரம்
தொல்லைநாமம் - நமோ நாராயணாய என்பது
தொலலையார் - பழையார்; பழைய காலத்தவர்
தொலைக்கை - முடிக்கை
தொலையாததாயிருநதது - அதிகமாயிருந்ததோ என்று பரிஹாஸமான பொருள்
தொலைவியேல் - போக்காதே கொள்
தொலைவில்லி மங்கலம் - 108 திவ்ய தேசத்துள் ஒன்று
தொழுகிற்றிகிராதில் - தொழுவல்லி கோளாகில்
தொழுதி - கூட்டம், துக்கம்
தொழுத்தைமார் - தாசிகள்
தொழுதை - ஆரவாரம்
தொழும்பு - அடிமை
தொள்ளி - சோறு
தொற்றுதல் - தொடுத்தல்
தொறு - பசு
தொறுப்பாடியோம் - பாடி-ஊர், ஆய்ப்பாடியில் உள்ளநாங்கள்
தொன்மால் - அளவிடமுடியாத எம்பெருமான்.
தொன்னகாம் - குலமுறையால் வரும் படைவீடு
தொன்னரகு - பிறவியாகிற நரகம்
தொன்மைக் கேடு - ஸ்வபாவக்கேடு
தொன்னீர் - கடல்
தொன்னை - இலையினால் செய்த பாத்திரம்
தொன்னெறி - பழைய மரியாதை; பழையதான அடையுமிடம், அர்ச்சாதிகதி என்றும் சொல்லுவர்.

## திருமலைக்கு நடந்து வரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள் :

தங்களுடைய வேண்டுதல்களில் ஒன்றாக பலர் திருமலைக்கு நடந்து வருகின்றனர். தி.தி. தேவஸ்தானம் அவர்களுக்காகக் கீழ்வரும் வசதிகள் செய்து உள்ளது.

* **யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல்லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தான சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல்கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில் காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.**
* **காளி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்மஸ்வாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன.**
* **நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன்வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.**
* **மறைவிடங்கள் உள்ளன. ஓய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.**
* **திருமலைக்குச் செல்லும் வழியில் யாத்திரிகர்களை களவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, கூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல் இரவு நேர ரோந்து ஏற்பாடுகள் உண்டு.**

முதலாழ்வார்கள் என்று கூறும் அருஞ்சிறப்புடைய பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் உலகப்பற்றை அறவே நீத்து முக்குணங்களிலே சத்துவ குணம் ஒன்றிலே ஒன்றி நின்று திருமாலின் அருங்கழலுக்கே தொண்டு செய்து வாழ்ந்து வந்தார்கள். எங்கும் நிறைந்துள்ள மறைபொருளான அப்பெருமானின் திருவடியைப்போற்றுதலே அருஞ்செல்வமாகக் கருதியதால் அவர்கள் உண்டிக்கும் உடைக்கும் போட்டிப் போட்டுக்கொண்டு தீயவழியில் செல்லும் மக்களைக் காணப் பிடிக்காமல் ஊர் ஊராகச்சென்று இறைவனைத்தேடித் திருக்கோயில்களில் அவ்விறைவனை தரிசித்து வந்தார்கள்.

இவ்வாறு அவர்கள் ஒருவரையொருவர் தனித்தனியாக மாலனைச் சேவித்து வரும்போது அவன் 'இவர்கள் மூலமாக ஞானமும் பக்தியும் ஊட்டவல்ல அரிய சிறந்த நூல்களை இயற்றுவித்து நல்லுணர்வும், நம்பிக்கையின் ஒளியும் ஏற்படச் செய்ய வேண்டும்' என்று திருவுள்ளங்கொண்டான். உடனே அம்மூவருடைய மனத்திலேயே திருக்கோவிலூருக்குச் செல்ல வேண்டும் என்ற எண்ணத்தைச் தோற்றுவித்தான்.

இறைவனின் திருவிளை-யாட்டை அறியாத அத்திருமால் செல்வர்கள், தனித்தனியாகத் திருக்கோயிலூரைச் சென்றடைந்தார்கள். பிறகு அந்தலத்தில் கோயில் கொண்டிருக்கும் உலகளந்த பெருமானை திரிவிக்கிரமப் பெருமானைச் சேவிக்கும் பொருட்டு திருக்கோயிலுள் சென்றார்கள். அகமும் மெய்யும் ஒருங்கே குளிரக் கண்கள் பனிப்ப அவ்வழகு கான பெருமானைச் சேவித்து மகிழ்ந்தார்கள். பகற்பொழுது போயிற்று. மாலைப் பொழுது மனங்களிக்க அழகுடன் தென் பொதிகைத் தென்றலையும், ஊரைச் சுற்றியுள்ள சோலையில் பூத்துக்குலுங்கும் மலர்களின் வாசத்தையும் ஏந்தி கன்னிப்பெண் போல் மென்னகை புரிய நடந்து வந்தது. அவளைக் கண்டு காதலன் ஆனந்தக் கண்ணீர் சொரிவது போல வானத்து மேகம் மழை பொழியலாயிற்று.

மூவருள் பொய்கையார் முதல் முதல் ஒரு வைணவருடைய திருமாளிகைக்குச் சென்று அம்மாளிகையின் இடைக்கழியில் படுத்து உறங்க முயன்றார். பிறகு அவர் படுத்துக்கொண்டிருக்கும் அதே திருமாளிகைக்கும் பூதத்தாரும் வந்து, சுவாமி அடியவனுக்கும் சிறிது இடம் கிடைக்குமா? என்று கேட்டார். பொய்கையார், 'நல்லது சுவாமி! இங்கு ஒருவர் படுத்துறங்கலாம். இருவர் இருக்கலாம். மூவராயின் நிற்றல் வேண்டும். அதுவும் நல்லதே வந்தருளுங்கள்' என்று கூறி எழுந்து நின்றார். பூதத்தாரும் எழுந்து நின்றார். பிறகு பேயாழ்வார் சென்று அவர்களோடு ஒருவராக நின்று கொண்டார். சிறிது நேரத்திற்குள் அவர்கள் ஒருவரையொருவர் வினவி தங்களைப் பற்றி மூவரும் அறிந்து கொண்டார்கள். பாலுடன் தேன் கலந்தது போல் மூவரும் கலந்து திருமாலின் பெருமைகளைப் பற்றியும் தெய்வ தரிசனம் சம்பந்தமாகத் தங்கள் ஆத்ம அனுபவங்களைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது திருக்கோவிலூரில் கோயில் கொண்டிருக்கும் உலகளந்த பெருமாள் கரிய இருளையும் பெருமழையையும் உண்டாக்கி அவர்கள் அறியா வண்ணம் அக்குறுகலான இடத்தில் அம்மூவர்களுக்கிடையே தானும் புகுந்து அவர்களை நெருக்கிக் கொண்டு நின்றார். அம்மூவரும் திடீரென்று முன்னைக் காட்டிலும் அதிக நெருக்கம் இருப்பதையறிந்து வியப்புற்று 'இது என்ன மாயமாக இருக்கிறது? முன்னைக்காட்டிலும் இப்பொழுது அதிக நெருக்கடி இருப்பது போல் தோன்றுகிறதே. இது எப்படி ஏற்பட்டது. நம்மைத் தவிர வேறு யாரேனும் இவ்விடைக்கழியிலே வந்து நிற்கிறார்களோ?' என்று தங்களுக்குள் சிந்தித்து இட நெருக்கம் உண்டானதற்கான காரணத்தை அறிய முயன்றார்கள்.

பொய்கையாரும் பூதத்தாரும் ஞானச்சுடர் விளக்கினை ஏற்றி மனம் என்னும் உட்கண்ணால் பார்த்தார்கள். பார்த்தளவிலே எங்கும் நிறைந்த பொற்சுடராக

# முதல் மூன்று ஆழ்வார்கள்

திரு. க. சுகுமாரன் - திருவாரூர்.

உள்ள எம்பெருமானின் கார் குழல் பின்னே தாழ, ஒளி பொருந்திய நவமணிகளையும் ஏந்திய அழகான முடி சிரத்தில் விளங்க, இருளைப் போற்றும் முழுநிலவைப்போல் முகம் எழிலுடன் காட்சி தர, செங்கமலம் போன்று ஒளிவீசி அன்பர்களின் உள்ளத்தே அருள் பொங்கச் செய்யும் கண்கள் குளிர்ச்சியுடன் நோக்க, பவளம் போல் மின்னும் கொவ்வைச் செவ்வாய் அருட் புன்னகையைப் புரிய, மடல்போல் நீண்ட காதுகளில் குண்டலங்கள் ஆட, வெண் சங்கு போல திகழும் கழுத்திலே கௌத்துவமணி புரள, ஆதவனை விட பலமடங்கு ஒளி மிக்க ஆழியை வலத்திருக் கையிலே ஏந்தி நிற்க, திங்களினும் ஒளி பொருந்திய வெண் சங்கு இடக்கையிலே இனிது பொருந்தியிருக்க, எல்லா உலகையும் அருளாலும் அன்பாலும் காக்கும் தாயான திருமகள் திருமார்பிலே குடிகொண்டிருக்க, பச்சை மாமலை போன்ற திருமேனியில் பொன்னாடை பொலிவுடன் விளங்க, தம்மிடம் பேரன்பு கொண்டு தம் புகழ்பாடும் அடியவர்களின் மனங்களிலே பதித்த பொற்றிருவடிகள் தாமரையென சிவந்து காண, உலகத்து உயிர்களுக்கெல்லாம் ஒரு முதல் தந்தையாகிய அந்த நெடிய திருமால் பொன்மலை மேல் அமரந்து வரும் நிலமலையெனக் கருடன் மீது அமர்ந்து வந்து அவர்களுக்குத் தன்னுடைய அருட்காட்சியைக் காட்டியருளினார். அவ்விறைவனின் அருங்கருணையினால் அக்காட்சியைக் கண்ட அவ்வடியார்களின் மகிழ்ச்சியை இங்கு விவரிக்க முடியுமோ?

நாராயணனின் அருட்காட்சியைக் கண்டு அவர்கள் தங்களை மறந்து விட்டார்கள்.

'வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச் செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குவே என்று'

என்று ஆரம்பித்து நூறு பாட்டுகளைக் கொண்ட ஓர் அந்தாதியை பொய்கையார் பாடிப் பரவினார். அடுத்து பூதத்தார்,

'அன்பே தகளியா, ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா- நன்பு உருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்"

என்று தொடங்கி நூறு பாட்டுக்களைக்கொண்ட ஓர் அந்தாதியை பாடினார். அடுத்து பேயாழ்வார்,

'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன்- செருக்கிளரும்
பொன் ஆழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என் ஆழி வண்ணன் பால் இன்று"

என்று தொடங்கி நூறு பாட்டுக்களைக் கொண்ட ஓர் அந்தாதியைப் பாடினார். அம்மூவருள் முதலில் பொய்கையார் பாடியருளியதால் அந்த அந்தாதியை முதற்றிருவந்தாதி எனவும், இரண்டாவதாக பூதத்தார் பாடியதால் அவர் பாடியருளிய அந்தாதியை இரண்டாம் திருவந்தாதி எனவும், கடைசியாக பேயார் பாடிய அந்தாதியை மூன்றும் திருவந்தாதி எனவும் கூறிப்போற்றி வருகிறார்கள். இவ்வாறு இறைவன் திருவிளையாடல் புரிந்து மூன்று அருள் தமிழ் அந்தாதிகளை இவ்வுலக மக்களுக்காக தம்மடியார்கள் மூலம் வெளிப்படுத்தினார்.

## 'நான்' என்ற எண்ணம்

வேதனம், ஹோமம், இவைகள் மூலம் தன்னுடையதல்ல என்ற எண்ணம் தலை தூக்கும். நிவேதனம் செய்யும் பண்டங்களை நாம் எடுத்துப் பயன்படுத்துகிறோம். ஹோமத்தில் அக்னியில் போட்டது உண்மையிலேயே தியாகமாகிறது. அக்னியில் தியாகம் செய்வது பொசுங்கிப் போய்விடுகிறது. இப்படித் தியாகம் செய்வது நம் சக்திக்குட்பட்டதாக இருக்கவேண்டும். திரவியங்களை அக்னியில் போட்டு மறையச் செய்வது நம் ஆசையின்மையின் அடையாளத்தைக் காட்டுவதாகும். நாம் சிறிதளவில் கொடுத்தாலும் தேவதைகள் அதைப்பெரும் அளவில் எடுத்துக்கொள்கின்றனர். ச்ரௌதயக்ஞங்களில் சிறிதளவுதான் ஹோமம் செய்யச் சொல்லியிருக்கிறது. தந்திரயக்ஞங்களில் பெரும் அளவு போடப்படுகின்றன. கர்மாக்கள் 'நான்' என்ற எண்ணம் குறையவே ஏற்பட்டுள்ளன. அக்னியில் ஹோமம் செய்தாலும் பிம்பத்திற்கு நிவேதனம் செய்தாலும் 'நான்' என்ற எண்ணம் மறைந்துவிடும்.

தொகுத்தவர்: சு. பொன்னம்மாள் - இராசபாளையம்.

## மதிப்புரை

# நவ பிருந்தாவனம்

ஆசிரியர்: வேலூர் இராம. பிரபாகரன்; வெளியீடு: பாலவிஹார், 1, ஸ்ரீதேவி கருமாரி அம்மனம் நகர், மேல் மணவூர், வேலூர்-632 010; பக்கங்கள் iv+68+40; விலை: குறிப்பிடப்படவில்லை.

'சான்றோருடைத்து' என்னும் புகழ்கொண்ட தொண்டை வளநாட்டின் பெருநகரமான வேலூரின் கண் அமைந்துள்ள சேண்பாக்கம் அருகே உள்ள 'நவ பிருந்தாவனம்' என்னும் புனித இடம் பற்றியது இந்நூல். மத்வ சம்பிரதாயத்தைச் சேர்ந்த 9 மடாதிபதிகளின் பிருந்தாவனங்களைக் கொண்ட தவ பூமி. வணக்கத்திற்குரிய மகான்களான துறவிகளின் உடல்கள் அடக்கம் செய்யப்பட்டு விளங்கும் இடங்களைப் 'பிருந்தாவனங்கள்' எனக்கூறுவது மரபு. அவ்விடங்களில் பிருந்தம் அல்லது துளசிச் செடிகள் வைக்கப்பட்டு வளர்க்கப்படுவதால் அவை பிருந்தாவனங்கள் எனப் பெயர் பெற்றதுபோலும்!

உத்திராதி மடத்தைச் சேர்ந்த ஆச்சாரியர்கள் இருவர், பிடி சந்யாசிகள் நால்வர், வியாசராஜ மடத்தைச் சேர்ந்த ஸ்ரீவித்யாபதி தீர்த்தர், ஸ்ரீசத்யாஜி ராஜ தீர்த்தர் ஆகிய இருவர் - ஆக எண்மர்களின் ஜீவ பிருந்தாவனங்களும், மந்த்ராலய மகான் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் மிருத்திகா பிருந்தாவனமும் கொண்டதுதான் இந்த 'நவ பிருந்தாவனம்'.

விரிவாகவும் நன்னெறிகளை விளக்கும் மேற்கோள்களுடனும் எழுதப்பட்டுள்ள இந்நூலில் இப்பிருந்தாவனங்களின் புனர் நிர்மாணம் பற்றிய விவரங்களும் 'நவ பிருந்தாவனத்'திலுள்ள பிருந்தாவனங்களின் புகைப்படங்களும் தொடக்கப்பக்கங்களில் தொகுக்கப்பெற்றுள்ளன.

கர்நாடகத்திலுள்ள ஆனேகுந்திக்கு அருகில் துங்கபத்திரை நதியின் அகலக்கட்டுப் பகுதியில் ஒரு சிறு தீவாக இருக்கும் குன்றுப்பகுதியில் அமைந்துள்ள (அ) பூரவ நவபிருந்தாவனம் பற்றிய விவரங்கள் விரிவாகத் தரப்பட்டுள்ளன. இந்த முந்தைய நவபிருந்தாவனங்களில் அடக்கமாகியுள்ள புனிதர்கள்: ஸ்ரீவியாசராஜர், அவருக்கு இடதுபுறம், பத்மநாப தீர்த்தர், இவருக்கு முன்னால் ரகுவர்ய தீர்த்தர், பின்னால் சுவீந்திர தீர்த்தர், இவருக்கு இடதுபுறம் வாகீசர், வியாச ராஜருக்கு வலப்புறம் சற்று முன்னதாக சுதீந்திர தீர்த்தர், (ஸ்ரீராகவேந்திர ஸ்வாமியின் குரு) நடுவில் ராமதீர்த்தர், கோடியில் ஸ்ரீநிவாஸ தீர்த்தர்,தனியாக கோவிந்த உடையார்.

ஸ்ரீவியாஸராஜ மடத்தைச் சேர்ந்த எதிசார்வ பௌமர் தாஸஸ்ரேஷ்டர் வியாஸ ராயர், ஸ்ரீகமபாலு ராமச்சந்திர தீர்த்தர. மநதராலய மகான ஸ்ரீராகவேந்திர ஸவாமிகள ஆகியோரின வாழ்ககை வரலாறறுக் குறிப்புகள் படித்துப் பயன்பெறத் தககவையாகும். வேலூர, நவபிருநதாவனத்தில ஸ்ரீராகவேந்திர ஸவாமிகளின பிருந்தாவனம் ஆலயம் எழும்பிய வரலாறு சுவைமிகுநது விளங்குவதாகும்.

'வேலூர் சேணபாக்கம் நவ பிருந்தாவன'த்தின் புனரமைப்பில் ஆர்வத்தோடு ஈடுபட்ட அன்பர்கள் பற்றிய விவரங்கள் மேலும் பல அன்பர்களை இத்தகைய ஆன்மீகப் பணிகளில் ஈடுபடுத்தும். மந்திராலய மகான் ஸ்ரீராகவேந்திரரின் மகிமைகளையும் சிறப்புக்களையும் போற்றும் பாடல்கள், பக்தர்களின் இலட்சணங்கள், அபிஷேகப் பொருள்களும் அவற்றால் விளையும் நற்பலன்களும் என்பன போன்ற தகவல்கள் நூலின் பயனைப் பெருக்குவதாயுள்ளன.

**திரு. அ. நடராஜன்.**

✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣

## பதினெட்டு புராணங்கள்

பதினென் புராணங்கள் என்ற தொடர் தெரியும். பதினென் புராணங்கள் எவை?

1. பிரும்ம புராணம், 2. பத்ம புராணம், 3. விஷ்ணு புராணம், 4. சிவ புராணம், 5. பாகவத புராணம், 6. லிங்க புராணம், 7. வராஹ புராணம், 8. நாரதீய புராணம், 9. மார்க்கண்டேய புராணம், 10. அக்னி புராணம், 11. பவிஷ்ய புராணம், 12. பிரம்ம வைவர்த்த புராணம், 13. ஸ்காந்த புராணம், 14. வாமன புராணம், 15. மத்ஸ்ய புராணம், 16. கூர்ம புராணம், 17. கருட புராணம், 18. பிரம்மாண்ட புராணம்.

**திரு. ஆர்.பி. சாரதி - சென்னை.**

## தமிழர் தாய் மருத்துவம்

ஆசிரியர்: டாக்டர் எஸ். சிதம்பர தாணுப்பிள்ளை; வெளியீடு: சித்த மருத்துவ இலக்கிய ஆய்வு மையம், தபால் பெட்டி எண். 7162, E-32, அண்ணாநகர் (கிழக்கு) சென்னை-600 102; பக்கங்கள்: 373; விலை ரூ. 200/-

பண்டைய தமிழ்நாட்டுச் சித்தர்களால் நிறுவப்பட்டதாகக் கருதப்படும் சித்த மருத்துவம் பிணி அகற்றும் ஆயுர்வேதம், யூனானி, அலோபதி (நவீன மருத்துவம்) ஹோமியோபதி, இயற்கை மருத்துவம் போன்ற பல்வேறு மருத்துவ முறைகளுள் ஒன்றாகும்; தொன்மையானது.

இந்நூல், 'உறுப்பு நோய் மருத்துவம்', 'அனுபவ மருந்துகள்' என்னும் இரு பகுதிகளால் ஆகியுள்ளது. முதல் பகுதியான 'உறுப்பு நோய் மருத்துவம்' என்பதில் சிரசு, கண், காது, மூக்கு, வாய், பல், தொண்டை, மார்பு, வயிறு, சருமம் போன்ற பல்வேறு உறுப்புகளின் நோய்களையும், மூலம்,குஷ்டம், மூத்திரதாரை, சுரம், வாந்தி, விக்கல், இருமல், ஆஸ்துமா, பித்தநோய், காமாலை, வாய்வு, குன்மம், உடல்வலி, வேதனை, பிடிப்பு, சுளுக்கு, நீர்க்கட்டு, வீக்கம், வலிப்பு, நரம்புத்தளர்ச்சி, அம்மை, சன்னி, வாத நோய், பாண்டுநோய், மகோதரம், சோகை, காலரா, விஷக்கடி போன்ற நோய்களையும் குணப்படுத்துவதற்கான மருந்துவகைகளும் அவற்றின் செய்முறைகளும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இரண்டாவது பகுதியான 'அனுபவ மருந்துகள்' என்பதில் கிழாயம் (கஷாயம்), சூரணங்கள் (பொடிகள்), பச்சைவெட்டு மருந்துகள், மாத்திரைகள், தைலங்கள் (எண்ணெய்கள்), கிருதங்கள், (நெய்கள்), அரிஷ்டங்கள் (ஊறல்கள்), மெழுகுகள், களிம்பு (குழம்பு), இலேகியம், பற்பங்கள் (பஸ்பங்கள்) , செந்தூரங்கள், சுண்ணங்கள், கட்டுகள் போன்ற மருந்து வகைகளும் அவற்றின் செய்முறைகளும் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

அந்தந்த நோய்களுக்கான மருந்துகளை உட்கொள்ளும் போது, கடைப்பிடிக்க வேண்டிய பத்தியங்களும், உண்ணவேண்டிய உணவு வகைகளும் தரப்பட்டுள்ளன.

விரிவாகவும், விளக்கமாகவும் எழுதப்பட்டுள்ளது எனினும், பிற மருத்துவ முறைகளையும், குறிப்பாக, நவீன (அலோபதி) முறையையும் முழுவதுமாகப் பயனற்றவை எனத் தன்போக்காக ஆசிரியர் கூறியுள்ள கருத்து அனைவரும் ஏற்றுக்கொள்ள முடியாததொன்றாகும். முக்கியமாக, நோயாளிகளுக்குச் சிகிச்சையளிக்கும் போது நோய்களையும் நோயறி முறைகளினால் கிடைக்கும் முடிவுகளையும் நோய்களைக் குணப்படுத்துவதற்கான மருந்துகளையும் பற்றித் தெளிவாகத் தெரிவிக்க வேண்டும் என்னும் கருத்து வலுப்பெற்று வரும் இன்று, இத்தகைய ஒருதலைக் கூற்றுகள் தவிர்க்கப்படுவது நல்லது. அதுவே முறையும்கூட. சித்த மருத்துவத்தின் சிறப்பினைச் சொல்லுகையில் பிற மருத்துவ முறைகள் பற்றிய, அறிவிற்கு ஏற்புடையதல்லாத கருத்துகளைக் கூறுவது சித்த மருத்துவத்திற்குச் சேவை செய்வதாகாது.

மருந்துகளைத் தயாரிக்கும் முறைகள் பற்றிய விவரங்கள் ஓரளவு பயனுள்ளவையே ஆயினும், பயிற்சியும் தேர்ச்சியும் பெற்ற வல்லுநர்களின் மேற்பார்வையில் தயாரிக்கப்படும் மருந்துகளே ஆபத்தில்லாதனவாகும்.

திரு. அ. நடராஜன்.

## அனுமனும் கண்ணனும்

இருவருக்கும் வெண்ணை மிகப் பிடித்தமானவை. இருவரும் மலையைத் தூக்கியவர்கள். அனுமன் சஞ்சீவி பர்வதத்தைத் தூக்கினார். கண்ணன் கோவர்த்தனகிரியை விரலினால் தூக்கினார். அனுமன், இராமர் பொருட்டு தருமத்தை நிலைநாட்ட இலங்கைக்கு தூது சென்றார். கண்ணன் திருதராஷ்டிரனிடம் பாண்டவர்களுக்காகத் தூது சென்றார். இருவருடைய தூதும் யுத்தத்தில் முடிந்தது. இருவரும் விஸ்வரூபம் எடுத்தவர்கள். அனுமன் இலங்கைக்குத் தூது சென்றபொழுது இராவணனுடைய சபையில் விஸ்வரூபம் எடுத்தார். கண்ணனும் விஸ்வரூபம் எடுத்தார். அனுமன் பவளமல்லி மரவேரில் இருப்பார். கண்ணன் பவளமல்லி மரத்தடியில் வீற்றிருப்பவர்.

தொகுத்தவர் : கமலா மாரியப்பன் - கோவை.

Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by M. Lakshman Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

